


சமய பாட போதனைத் திங்களிதழ்
திருவள்ளுவர் ஆண்டு 2006
ஆடித் திங்கள்
1975 ஜூலை



உ

கந்தரலங்காரம்

படிக்கின் றிலைபழ னித்திரு
நாமம் படிப்பவர்தாள்
முடிக்கின் றிலை "முரு கா" என்
கிலைமுசி யாமலிட்டு
மிடிக்கின் றிலைபர மானந்த
மேற்கொள விம்மி விம்மி
நடிக்கின் றிலைநெஞ்ச மேதஞ்ச
மேது நமக்கினியே!

—அருணகிரிநாதர்.

*

தமிழ்நாடு தெய்விகப் பேரவை
9, மகாராஜா சூரியராவ் சாலை
சென்னை - 600018,

உ

# அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி
## திருக்கோயில், பழனி

❀❀❀❀❀

பழனி ஞானதண்டாயுதபாணியைப் பணிந்திட வாரீர்!
அழகான திருமுருகன் அருள் பெறவே திரண்டு வாரீர்!
செந்தேனும் பாலும் மணக்கும் சேயோனை வழிபட வாரீர்!
சந்தன விபூதி மணக்கும் திருமேனி கண்டு மகிழ வாரீர்!

முடிக்காணிக்கை தரத் தனியிடம்!
தங்குவதற்கேற்ற வசதிகள்!
முதியவரும் முடியாதோரும் முருகன் அருகே செல்ல
இழுவை ரயில் வசதி!
பொங்கியெழும் பேரழகனைத் தாங்கிவரும் தங்கரதம்
காண வசதிகள்!

அத்தனையும் செய்து அழைக்கிறது பழனித் திருக்கோயில். தமிழ்க்கடவுளாம் கந்தப்பெருமானின் அருள்பெற்று, அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் கண்காணிப்பில் கீழே கண்ட நிறுவனங்கள் நிர்வகிக்கப்படுகின்றன.

1. அருள்மிகு பழனியாண்டவர் கலைக்கல்லூரி
2. அருள்மிகு பழனியாண்டவர் இந்தியப் பண்பாட்டுக் கல்லூரி
3. அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக்கல்லூரி
4. அருள்மிகு பழனியாண்டவர் செந்தமிழ்க் கல்லூரி
5. கார்த்திக்பள்ளி (ஆங்கிலப்போதனை)
6. செவிடர்பள்ளி
7. நாதசுரக் கல்லூரி
8. வேத ஆகமப்பாடசாலை
9. அன்புஇல்லம் (அநாதை விடுதி)
10. முதியோர் இல்லம்
11. குழந்தைகள் காப்பகம்
12. மருத்துவமனை

பழனித் திருமலையில் நாளும் பெருகிவரும் பக்தர்கட்குப் போதிய வசதிகள் செய்து தருவதற்காக 60 லட்சரூபாய் செலவில் மாபெரும் திருப்பணித் திட்டம் செயல்பட உள்ளது.

ஆர். அர்ச்சுனன், பி.ஏ.,
துணை ஆணையர்-நிர்வாக அதிகாரி




சமய பாட போதனைத் திங்களிதழ்

வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல.

—திருக்குறள்.



| மணி 4 | இராக்கத ஆடி<br>1975 ஜுலை | ஓசை 1 |
|---|---|---|



## அருளோசை அன்பர்களுக்கு வணக்கம்

இந்த மாதத்திலிருந்து அருளோசை இதழைப் புதுப்பொலிவுடன் அளிக்கிறோம். மூன்றாண்டுகள் தவழ்ந்து தளர்நடையிட்டு நான்காவது ஆண்டில் நடைபயில் பருவத்தைத் தொடங்கியிருக்கிறது. இந்த திங்களில் இதழ் சில புதிய சிறப்பியல்களுடன் அமைந்திருப்பதைக் காணலாம். பெரிய அளவில் அதிகமான கட்டுரைகளுடன் வெளி வருகிறது. இதுவரையில் இந்த இதழை ஆதரித்து வந்த அன்பர்கள் இதன் வளர்ச்சிக்கு ஆர்வம் காட்டித் துணைபுரிவார்கள் என்று நம்புகிறோம்.

இதுவரை நம்மை ‘‘வள்ளுவர் வழியிலே’’ அழைத்துச் சென்று, அப்பெருந்தகையாரின் அடிச்சுவட்டைப் பின்பற்றும் வகையில் எழுதியருளிய கட்டுரைகள் சென்ற இதழுடன் முடிவடைந்து விட்டது. நாட்டிற்குத் தேசியக் கொடி, தேசீய கீதம், தேசீய பறவை இவை ஏற்படுத்தியிருப்பது போல தேசீயநூல் ஒன்று இருக்க வேண்டுமென்றும் அதுவும் திருக்குறளாகவே இருக்க வேண்டுமென்றும் தவத்திரு அடிகளார் அவர்கள் பல்லாண்டுகளாகவே வற்புறுத்தி வருகிறார்கள். அதை அடுத்த இதழிலிருந்து எழுத்துவடிவில் வடித்துத் தர இருக்கிறார்கள்.

நமது அறநிலையத்துறை ஆணையர் திரு. கே. எஸ். நரசிம்மன், ஐ.ஏ.எஸ்., அவர்கள் அருளோசை வெளியீட்டுத் தொடக்கத்திலிருந்தே திருக்கோயில்கள் பற்றிய கட்டுரைகளை எழுதி உதவி வருகிறார்கள். இந்த இதழில் செங்கற்பட்டுக்கருகிலுள்ள திருக்கச்சூர் என்ற பாடல்பெற்ற பதியைப் பற்றிய கட்டுரையை வரைந்து உதவியிருக்கிறார்கள். அறநிலையத்துறை வெளியீடான ‘திருக்கோயில்’ இதழின் ஆசிரியர் திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல். அவர்கள் தொடக்கத்திலிருந்தே ‘‘திருவுருவ உண்மைகள்’’ என்ற தலைப்பில் நாம் வணங்கும் தெய்வத் திருவுருவங்கள் பற்றிய தத்துவங்களை விளக்கி எழுதினர்கள். இந்த கட்டுரையில்

'திருமாலின் ஐந்துவகை நிலை' என்பது பற்றி எழுதியிருக்கிறார்கள். பரம், விபவம், வியூகம், அந்தர்யாமி, அர்ச்சை என்ற ஐந்து நிலைகளைப் பற்றி எடுத்துக் கூறியிருக்கிறார்கள். திருச்செந்தூர்க் கோயில் அறங்காவலர் திரு. டி. ஆர். சுப்பிரமணியம் அவர்கள் 'வேல் வேல்' என்ற கட்டுரை எழுதியிருக்கிறார்கள். 'வேலை வணங்குவதே வேலை', 'வழிக்குத் துணை வடிவேல்' என்பதையெல்லாம் மிகவும் பக்தியுணர்வுடன் எழுதி உதவியிருக்கிறார்கள். வைணவக் கல்லூரிப் பேராசிரியர் திரு கா. அ. மணவாளன், எம்.ஏ.,.பி ஒ எல், அவர்கள் 'திருமால் அடியார்கள்' பற்றிய தொடர் கட்டுரைகளில் இராமானுசரைப் பற்றிக் கடைசியாக முடித்தார்கள். இந்த இதழில் "மாலையும் வந்தது மாயன் வாரான்" என்ற ஓவியத்தைத் தீட்டிக் காட்டியிருக்கிறார்கள். பழனியாண்டவர் பண்பாட்டுக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் அ. மா. பரிமணம், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி., அவர்கள் முன் இதழ்களில் அப்பர் பெருமானின் அழகிய சொற்றொடர்களைத் தலைப்பாகக் கொண்ட கட்டுரைகளில் அருமையான விளக்கங்களை விரித்துக் கூறினார்கள். இந்த இதழில் "என் செய்வான் தோன்றினேன்" என்ற பொருள் பற்றி எழுதியிருக்கிறார்கள். வழக்கம்போல் திரு கலியாணம் பிள்ளையவர்கள் சிவனடியார் வரலாறுகளில் சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் பற்றி "நம்பியாரூரன் நாம் தொழும் தன்மையான்" என்ற தலைப்பில் எழுதியிருக்கிறார்கள். நன்னிலம் ஆசிரியை திருமதி சி. மீனாம்பாள் அவர்கள் மகளிர் பகுதியில் "பெரியபுராணத்துப் பெண்மணிகள்" பற்றி ஒரு அழகிய சிறு தொகுப்பைக் கொடுத்திருக்கிறார்கள். இளைஞர் பகுதியில் எழுத்துப் பட்டிமன்றத்தில் திரு. ம. கார்மேகம், எம்.ஏ., அவர்கள் "திருக்கோயில் கருவறைக்குள் இறைவனுக்குப் பூவும் நீரும்இட்டு வழிபாடு செய்து கொள்ளும் உரிமை சீலமுடைய அனைவருக்கும் உண்டா? இல்லையா?" என்ற தலைப்பில் "உண்டு" என்ற கட்சியில் வாதத்தைத் தொடங்கியிருக்கிறார்கள். எழுத்து வடிவில் எதிர்வாதம் செய்யும் கட்டுரையொன்று அடுத்த இதழுக்காக இளைஞர்களிடமிருந்து எதிர்பார்க்கிறோம். சேக்கிழார் தாசன் திரு. இராமசேஷன், எம்.ஏ., நம்பியாண்டார்நம்பி திருவந்தாதிக்கு குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் அருட்டிரு. ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள் எழுதியுள்ள பொழிப்புரையைத் தொகுத்துக் கொடுத்திருக்கிறார்கள். திரு. கோடப்பிள்ளை, பி.ஏ., அவர்கள் "ஆண்டாள்", "பிறவாமை வேண்டும்" என்ற நாடகக் காட்சிகளை அமைத்துக் காட்டியுள்ளார்கள். அனைத்துக் கட்டுரைகளையும் அன்பர்கள் படித்து இன்புற வேண்டுகிறோம்.

சென்ற மூன்று ஆண்டுகளில் வெளிவந்த இதழ்களுக்கு கட்டுரைகள் வழங்கிய குருமகா சந்நிதானங்களுக்கும், பேரறிஞர்களுக்கும் நம்முடைய வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

வினாக்களுக்கு விடையெழுதுவதில் அதிகம் பேர்கள் கலந்து பயன்பெற வேண்டுகிறோம். அருளோசை இதழ் பற்றிய கருத்துக்களையும் அன்பர்களிடமிருந்து வரவேற்கிறோம். "ஐயம் தெளிதல்" என்ற பகுதிக்கு சமயம், தத்துவம், சமுதாயம் இவை பற்றிய நியாயமான கேள்விகளை எதிர்பார்க்கிறோம்.

பொ. ரெ. கோவிந்தராஜலு, பி.ஏ., பி.காம்.,

பதிப்பாசிரியர்.

66-1

# சமயபோதனை

பாடம் 16     வினுக்கள்     ஜூலை 1975

மதிப்பெண் சமம்]     [மதிப்பெண் 100

வினுக்கள் இந்த இதழ்க் கட்டுரைகள் பற்றியனவே ஆகும் விடைகளை முழு அளவு Foolscape size) இரண்டு தனித் தாள்களில் நான்கு பக்கத்திற்குள் எழுதி இச்செயலகத்திற்கு, 31-8-1975க்குள் கிடைக்கும்படி அனுப்பி வைக்க வேண்டும். சந்தா எண், பெயர், வயது, முகவரி இவற்றைத் தெளிவாக எழுதி அனுப்பவேண்டும்.

1. பெரிய புராணத்துப் பெண்மணிகளைக் கட்டுரையாளர் எத்தனை வகையாகப் பிரிக்கிறுர் ?
2. நம்பியாரூரன் நாம் தொழும் தன்மையான், காரணங்கள் கூறுக ?
3. கருவறையில் இறைவனை வழிபட நமக்கு உரிமையுண்டு கட்சிக்காரரின் வாதங்கள் என்ன ?
4. திருமாலின் ஐந்து நிலைகளைச் சுருக்கி விளக்குக ?
5. திருக்கச்சூர் ஆலக் கோயில் யாண்டுளது ? எவர் தேவராம் பெற்றது ?
6. வேலை வணங்குவதே வேலை. ஏன் ?
7. "எறும்பிடை நாங்கூழெனப் புலனுல் அரிப்புண்டு அலமந்த வெறுந்தமியேன்"-இது யாருடைய திருவாக்கு விளக்கம் தருக ?
8. காதலிக்கு மண்ணும் விண்ணும் எவ்வாறு காதலனை நினைவூட்டுகிறது ?
9. "இரந்தீசுவரர், விருந்தீசுவரர்" பெயர்க் காரணத்தை விளக்குக ?
10. "நான் செத்த பின் வா !" இதிலுள்ள தத்துவப் பொருளை விளக்குக ?

விடைகளை எழுதி உரிய அஞ்சல்தலை யொட்டிக் கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்பவேண்டும் :

"அருளோசை"
தமிழ்நாடு தெய்விகப் பேரவை,
9, மகாராஜா சூரியராவ் சாலை,
ஆள்வார்பேட்டை, சென்னை-600 018.

---

## வினு விடைப் பகுதி ஜூன்-75
## பரிசு பெற்றவர்கள்

முதல் பரிசு : திரு. மு. பி. ஆ. சக்திவேல் முருகன், சங்கரன் கோவில் திருநெல்வேலி மாவட்டம், சந்தா எண் 3776

இரண்டாம் பரிசு : திரு. ஆர். கிருஷ்ணமூர்த்தி, எம்.ஏ., கூத்தா நல்லூர் 614101. தஞ்சை மாவட்டம், சந்தா எண் 3145

மூன்றும் பரிசு : திரு. கி. சுப்பராமன், சென்னை 600001 சந்தா எண் 846

நான்காம் பரிசு : திரு. கே. ஆர். கிருஷ்ணமூர்த்தி, கூடலையாற்றூர் 608702 தென் ஆர்க்காடு மாவட்டம், சந்தா எண் 689.

## இந்த இதழில்

குன்றக்குடி

# அருள்மிகு ஆறுமுகப் பெருமான்

# பாமாலை

மரு. பரமகுரு

உழைத் தவர் கஞ்சிக் கழுவர் உழைக்கா துறிஞ்சுபவர்
தழைக்கின் ற செல்வச் செருக்கில் கொழுப்பர் தகு பகையை
அழைக்கின்ற சேவற் பதாகையாய் இந்த அநீதியை நீ
ஒழிக்கின் ற வாறு திருவுளம் கொள்க ஒரு நொடியே. (53)

சாதி வெறி சாத் திரப்பொய்ச் சடங்குச் சமயவெறி
மோதும் இன வெறி முட்டாள் நிறவெறி கட்சிவெறி
ஓதும் மொழி வெறி நாட்டு வெறியை ஒழித்துலகம்
நீதி நெறியில் தழைக்க அறுமுகா நீயருளே. (54)

அணுக்களும் அண்ட சராசரம் யாவும் நின் ஆணைவழிக்
கணக்குப் பிழையின் றித் தாமே யியங்கும் கடவுளே தீ
மனத்தைப் பெற் றிட்ட மனித்தக் குலம்மட்டும் வாழ்க்கையினைப்
பிணக்கில் கழிப்பதேன் பேதைமைப் பட்டதேன் பேரருளே. (55)

வேண்டும் உணவும் உடையும் உடையுளும் விண்ணகத்தைத்
தாண்டும்விஞ் ஞானத்தால் கோள் பிடிப் பார்இத் தரணிமிசை
வேண்டும்பண் டங்குவித் தப்பால் மிகை செய்ய வேண்டியுன்றன்
நீண்டபொற் பாதம் நினைவேன்குன் றக்குடி நின்றவனே. (56)

வறுமை பிணி அறி யாமையால் வாடிடும் மக்களெல்லாம்
சிறுமையின் நீங்கிச் செழித்துயர்ந் தோர்குலச் செந்நெறியில்
ஒருசேர வாழ உவந்தருள் செய்க உலகு புகழ்
பெருமை சேர் குன்றக் குடிமலை மேவிய பேரிறையே. (57)

நாமகள் வைகிய நாவின னாகிய நான்முகனை
ஓமெனும் மந்திரத் துட்பொருள் கேட்டுப் பின் ஓங்கிக்குட்டி
ஏமச் சிறையிட்டுச் சிட்டித் தொழிலை இயற்றியவன்
நாமம் புனையாம் மனமே செருக்கு நமக்கெதற்கே. (58)

பாழும் வயிற்றுக்கே நாளும் உழைத்துப் பயனிலாமல்
வாழும் அடிச்சிறு நாயேன் தலையுன்றன் வார் கழற்கே
தாழும் படிக்கருள் அன்றேல் வணங்காத் தலையரக்கர்
வீழும் படிக் கன்று வேல் தொட்ட வா, எனை வீழ்த்துகவே. (59)

பாருங்கல் போன்ற என் பாழான நெஞ்சகம் பக்குவிட்டு
நீரா யுருகிப் பெருக் கெடுத் தோடி நினதருளாம்
வாரி கலந்திட வே அருள் அன்றேல் வள ரொளி வேற்
கூரால் பிளந்து பொடிப் பொடி யாக்குக கொற்றவனே. (60)

# திருக்கச்சூர் கோயில்







தேவாரத் திருப்பாடல் பெற்ற தொண்டை நாட்டுச் சிவத்தலங்களுள், திருக்கச்சூர்க் கோயில்ஒன்று. இது 'கச்சூர்ஆலக்கோயில்' எனத் தேவாரப் பாடல்களில் குறிக்கப் பெற்றுள்ளது. இந்தத்தலம் செங்கற்பட்டுக்கு அருகேயுள்ள சிங்கப்பெருமாள் கோயில் இருப்புப்பாதை நிலேயத்தினின்று, வடமேற்கே ஒரு கல் தொலேவில் உள்ளது. செங்கற்பட்டில் இருந்து திருவள்ளூர்க்குச் செல்லும் உந்தூர்திகள், திருக்கச்சூர் வழியாகச் செல்கின்றன.

இங்கு மலேமேல் ஒருகோயிலும், ஊரின் நடுவே ஒரு கோயிலும் ஆக இரண்டு கோயில்கள் அமைந்துள்ளன. மலேமேல் உள்ள கோயிலில் எழுந்தருளியிருக்கும் சுவாமிக்கு மருந்தீசுவரர் என்றும், அம்பிகைக்கு இருள் நீக்கித்தாயார் என்றும் -பெயர்கள் வழங்குகின்றன. தேவ மருத்துவர்கள் ஆகிய அசுவினி தேவர்கள், ஒரு சமயம் தேவேந்திரனுக்கு உற்ற ஒரு பிணியைத் தீர்ப்பதற்காக, இங்கு வந்து இறைவனே வழிபட்டு, இங்குள்ள மலேயில் இருந்து மூலிகை மருந்துகளே, இறைவனின் அருளால் கிடைக்கப் பெற்றனர். அதனுலேயே சுவாமிக்கு மலேமருந்தீசர் என்று பெயர் ஏற்பட்டது என்பது தலவரலாறு.

" மேலே விதியே வினேயின் பயனே
விரவார்புரம் மூன்று எரி செய்தாய்!
காலே எழுந்து தொழுவார் தங்கள்
கவலே களேவாய் கறைக்கண்டா!
மாலே மதியே மலேமேல் மருந்தே!
மறவேன் தடியேன்; வயல்சூழ்ந்த
ஆலேக் கழனிப் பழனக் கச்சூர்
ஆலக் கோயில் அம்மானே"

என வரும் சுந்தரர் தேவாரப் பாடலில், மலேமேல் மருந்து என்னும் பெயர், இத்தல வரலாற்றை யுணர்த்தும் குறிப்பாக அமைந்திருத்தல் காணலாம். இம்மலேக் கோயில் சிறியதாக இருந்தாலும், அழகும் சிறப்பும் உடையதாகத் திகழ்கின்றது.

ஊர் நடுவேயுள்ள கோயில் தியாகராஜசுவாமி கோயில் என வழங்குகின்றது. தியாகராஜ சுவாமி என்பது, இக்கோயில் உற்சவ மூர்த்திக்குப் பெயர். சுந்தரரின் தேவாரப் பாடல் பெற்ற தலமாதல் பற்றி, அவருக்கு மிகவும் விருப்பமான திருவாரூர்த் தலத்தில், சோமாஸ்கந்த வடிவத்தில் விளங்குகின்ற தியாகராஜ சுவாமியே, இங்கும் உற்சவ மூர்த்தியாக வைத்து வழிபடப்பெற்று வருகின்ருர் எனத் தெரிகின்றது. இக்கோயிலின் மூலத்தானத்தில் உள்ள பெருமான் கச்சபேசுவரர் என வழங்கப் படுகின்ருர். தேவர்களும் அசுரர்களும் அமிழ்தம் பெறுவதற்கு விரும்பித் திருப்பாற்கடலேக் கடைந்தபொழுது, மந்தரமலேயாகிய மத்து அசையாமல் நிற்கும் பொருட்டுத் திருமால் ஆமையாக வடிவம் எடுத்து, அதனேத் தாங்கினுர் என்பது வரலாறு; அங்ஙனம் கச்சபம் என்னும் ஆமை வடிவம் எடுத்த திருமால் இங்கு வழிபட்ட காரணத்தினுல், இங்குள்ள பெருமானுக்குக் கச்சபேசுவரர் எனப் பெயர் அமைந்தது. இங்குள்ள அம்பிகை அஞ்சனுட்சி எனப் போற்றப் பெறுகின்ருள். இக் கோயிலும் பல சந்நிதிகளுடன், நல்ல அமைதியான சூழ்நிலேயில் அழகுற அமைந்து திகழ்கின்றது. மலேமேல் இரந்தீசுவரர் என்றும், விருந்தீசுவரர் என்றும் இருபெயர் கொண்டு, சிவபிரான் விளங்குகிருர்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் இத்தலத்திற்கு வந்து தரிசனம் செய்த பொழுது, நண்பகல் நேரமாக இருந்தது. வழி நடந்து வந்ததனுல் அவர் பசியாலும் களைப்பாலும் சோர்வுற்று வருந்தினுர். அது கண்ட சிவபெருமான், மனித வடிவம் கொண்டு, அவ்வூரில் உள்ள வீடுகள் தோறும் சென்று இரந்து பிச்சை ஏற்று உணவெடுத்து வந்து, சுந்தரருக்கு உணவு கொடுத்து விருந்தளித்தார். அவ் வரலாற்றை யுணர்த்தும் முறையிலேயே, இரந்தீசுவரர், விருந்தீசுவரர் எனச் சிவபெருமான் இங்கு இரு வடிவங்கள் கொண்டு திகழ்கின்ருர். இவ் வரலாற்றுக் குறிப்பும்,

" கச்சேர் அரவொன் றரையில் அசைத்துக்
கழலும் சிலம்பும் கலிக்கப் பலிக்கென்று
உச்சம் போதா ஊர்ஊர் திரியக்
கண்டால் அடியார் உருகாரே?"

எனவரும் சுந்தரர் தேவாரத் திருப்பாடலில் அமைந்திருத்தல், அறிந்து இன்புறுதற் குரியது.

"படியிலா நின்பாட்டில் ஆருர!
நனிவிருப்பன் பரமன் என்பது
அடியனேன் அறிந்தனன்; வான்
தொழும்ஈசன்
நினைத்தடுத்தாட் கொண்டும்,
அன்றித்
தொடியுலாம் மென்கைமட மாதர்பால்
நினக்காகத் தூ துசென்றும்,
மிடியிலா மனைகள்தொறும் இரந்திட்டும்
உழன்றமையால் விளங்கு மாறே"

என்று துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் பாடுதற்கு ஏற்ப, இறைவன் தன் அடியவராகிய சுந்தரர் பொருட்டுப் பிச்சை ஏற்றுழன்று, தன் எளிமையையும் 'அருட் சிறப்பையும் வெளிப் படுத்திய திருக்கச்சூர்த் தலத்தின் பெருமை அளப்பரிது! அன்பர்கள் திருக்கச்சூர்க்குச் சென்று வழிபட்டு, நலம்பலவும் பெற்று மகிழ்வார்களாக. 

## நான் செத்தபின் வா

நகர்ப்புறத்தில் ஒரு குடிசையில் சாது ஒருவர் வசித்து வந்தார். நகரத்தில் அப்பாசாமி என்ற எளியவன் வாழ்ந்தான். அவன் ஒரு அப்பாவி; ஆனுல் நல்லவன். பெரியவரிடம் அறிவுரை கேட்க விரும்பினுன். குடிசைக்குச் சென்று கதவைத்தட்டினுன். 'யார்' என்று உள்ளிருந்து குரல வந்தது." நான்தான்" என்ருன் வந்தவன். "நான் செத்த பின் வா" என்ற குரல் உள்ளே எழுந்தது. துறவியின் தியான நிலையைக் கலைத்து விட்டோமோ என்று பயந்து தன் வீட்டை நோக்கி நடந்தான். மறு நாளும் வந்து கதவைத் தட்டினுன். 'நான்தான்' என்ருன் அப்பாசாமி, " நான் செத்த பின் வா" என்ற சோகக்குரல கியம்பியது. "அவர் செத்த பின் நாம் எதற்கு வரவேண்டும்" என்று எண்ணிய வண்ணமே வந்த வழியே திரும்பினுன் அந்த மந்த புத்தி, மூன்ரும் நாள் தன் மனதைத் திடப்படுத்திக் கொண்டான். என்ன ஆனுலும் அந்த சாதுவிடம் உபதேசம் பெற வேண்டுமென்று குடிசைக்கு விரைந்தான்; கதவைத் தட்டினுன்."யார் அங்கே" என்று கேட்டார் உள்ளேயிருந்த யோகி, "அவன்தான்சாமி அப்பாசாமி. நேற்றும் முன்ரும் நாளும் கதவைத் தட்டினுனே அவன்" என்று பதில் சொன்னுன். கதவு திறந்தது புன்னகை மலர்ந்த முகத்துடன் உள்ளே அழைத்துச் சென்ருர் அந்த சான்ருேர். "நான் செத்த பின் வா" என்பதன் விளக்கத்தைக் கேட்டான். "முதல் இரண்டு நாட் களிலும் நீ 'நான்தான்' என்று சொன்னுய். மூன்ரும் நாள் 'அவன்தான் அப்பாசாமி' என்று கூறினுய். ஆகவே உன்னிடமிருந்த 'நான்' என்னும் ஆணவம் அழிந்து விட்டது தெரிந்து கதவைத்திறந்தேன். நான் என்பது அகங்காரம்; எனது என்பது மமகாரம். இவை இரண்டும் அழிந்து எல்லாம் அவன் (கடவுள்) என்ற எண்ணம் ஏற்பட்டால் தான் அவன் திருவருள் கிடைக்கும்" என்று சாது அவனுக்கு விளக்கம் கூறினுர். ஐயம் தெளிந்த அப்பாசாமி அக மகிழ்ந்து அடி பணிந்து வீழ்ந்தான். அவ்வப்போது அவரிடம் சென்று அருளுரை கேட்டு வந்தான்.

—மயூரமணம்.

# நம்பியாரூரன் நாம் தொழும் தன்மையான்

திருக்கயிலை மாமலை. அதன் தாழ்வரையில் பல யோகியர் புடை சூழ உபமன்னிய முனிவர் அமர்ந்திருக்கிறார். அவர் கதுமென எழுந்து சிரமேல் கரங்கூப்பி தென் திசை நோக்கி வணங்கினார். ஆயிரம் சூரியப் பிரகாசமுடைய ஒரு பேர் ஒளி தோன்றியது. "சிவபெருமானையன்றி எவரையும் இறைஞ்சாத சென்னி இறைஞ்சுவதன் ஏது யாது" என இறைஞ்சினர் மற்றையோர். "எந்தையருளால் சுந்தரன் வருகின்றான். அந்த நம்பியாரூரன் நாம் தொழும் தன்மையான் என்று கூறுகிறார் முனிபுங்கவர். "அப்படியானால் அவர் வரலாற்றை எங்களுக்குச் சொல்லியருள வேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொள்கின்றனர். உபமன்னிய முனிவர் சொல்லத் தொடங்குகிறார். இப்படித் தொடங்குகிறது பெரியபுராணம். வரலாற்றில் கடைசி நிகழ்ச்சியை முதலில் வைத்து முன் நிகழ்ச்சிகளை அமைத்துக் காட்டுவது நாடக ஆசிரியர் கையாளும் உத்திகளில் ஒன்று. அதை Flash back என்பர். பன்னூறு ஆண்டுகட்கு முன்னரே எங்கள் சேக்கிழார் பெருமானின் திருவாக்கில் தோன்றியிருப்பது நாம் எண்ணியெண்ணி இறும்பூது கொள்ளத் தக்கது. இனி நாம் எடுத்துக் கொண்ட பொருள் மேற் செல்வோம்.

சுந்தரர் பெருமானின் திருச் சரிதையைக் கூற வாய்ப்பாய் அமைந்த தம் பிறப்புக்கே வணக்கம் செலுத்துகிறார் தெய்வச் சேக்கிழார். பிறப்புக்கு வணக்கம் கூறும் புலவர்களை யாம் யாண்டும் கண்டிலம். என்னே அத்தெய்வப் புலவர் சுந்தரர் பெருமானிடம் கொண்ட பெரும் பக்தி! "தேசம் உய்யத் திருத்தொண்டத் தொகை முன் பணித்த திருவாளன் பாச மலர் மென்கழல் வணங்க வந்தபிறப்பை வணங்குவாம்" என்பது அவர் திருவாக்கு. எனவே, திருத்தொண்டர் புராணத்துக்கு சுந்தரரைக் காவியத் தலைவர் ஆக்கி மற்ற நாயன்மார் வரலாறுகளை ஆங்காங்கே பாங்குறப் பொருத்தி, திருக்கயிலையில் தொடங்கி, திருக்கயிலையில் முடியுமாறு அமைத்திருக்கும் மாட்சி போற்றிப் பாராட்டத்தக்கது. பெரிய புராணத்தில் திருமலைச் சிறப்பு (40), தடுத்தாட் கொண்ட புராணம் (203) ஏயர் கோன்கலிக்காம நாயனார் புராணம் (409) கழறிற்றறிவார் (சேரமான் பெருமாள்) புராணம் (175), வெள்ளானைச் சருக்கம் (53) ஆகிய பகுதிகளில் 880 பாடல்களில் சுந்தரர் வரலாறு வரக் காண்கிறோம். அந்த வரலாறு யாவருமறிந்தது. ஆதலின் ஈண்டைக்கு விரித்துக் கூற வேண்டிய தேவையில்லை. சில ஆராய்ச்சிக் குறிப்புக்களை மட்டும் சொன்னால் போதுமானது என்று கருதுகிறோம். சுந்தரர் திருஅவதாரம்: திருநாவலூர் ஆதிசைவ வேதியர் சடையனாருக்கும் இசை ஞானியாருக்கும் மகவாய்த் தோன்றினார். "தீதகன்று உலக முய்யத் திருஅவதாரம் செய்தார். "மாதவம் செய்த தென்திசை வாழ்ந்திட" வந்தார் என்பர்குன்றை முனிவர் சேக்கிழார்.

பெயர்: திருக்கயிலாயத்தில் அவருக்கு ஆலால சுந்தரர் என்ற பெயர் இருந்தது. சுந்தரர் என்ற பெயரை சேக்கிழார் எங்கும் கூறவில்லை. "நம்பியாரூரன், என்றே நாமமும் சாத்தி" என்று கூறுகிறார் ஏழாம் திருமுறையில் தம்மை நம்பியாரூரன், ஆரூரன், ஊரன் என்றே கூறியிருப்பது தவிர சுந்தரர் என்று யாண்டும் கூற வில்லை. ஒரு இடத்தில் "சுந்தர வேடங்களால் துரிசே செயும் தொண்டன்" என்கிறார். எனவே சுந்தரர் என்ற திருநாமம் பிற்காலத்தில் ஏற்பட்டது.



ஊர் : பிறந்தது திருமுனைப்பாடி நாட்டி லுள்ள திருநாவலூர், "நாதகீத வண் டோதுவார்பொழில் நாவலூரன் வன்றெண்டன்" என்று அழகாக அமைத் துத் தம்மைக் கூறிக் கொள்கிறார். தென் ஆர்க்காடு மாவட்டத்தில் இப்போது இவ்வூர் திருநாமநல்லூர் என்று வழங்கி வருகிறது.

காலம் : சுந்தரரும் சேரமான் பெரு மாளும் திருக்கயிலாயத்துக்கு எழுந்தரு ளியது கி. பி 825ல் என்று ஆராய்ச்சி யாளர் கருதுகின்றனர். அந்த ஆண்டிலே தான் கொல்லம் சகாப்தமும் தொடங்கு கிறதென்றும் கூறுகின்றனர். "கொடுக் கிலாதானைப் பாரியே யென்று கூறினும் பொருள் கொடுப்பாரிலை" என்று தம் தேவராத்தில் கூறியிருப்பதால் சுந்தரர், பறம்பு மலைப் பாரி வள்ளலுக்குப் பிற்பட்ட வர் என்பது தெளிவு.

தம்பிரான் தோழர் : தாசமார்க்கம் சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்பன இறைவனையடை யும் வழிகள். அதில் சகமார்க்கத்தில் நின்றவர் சுந்தரர். இறைவனுடன் தோழ மையில் பழகியவர்." ஏழிசையாய் இசைப் பயனாய் என்னுடைய தோழனுமாய்" என்று கூறுகிறார்.

மனைவியர் : புத்தூர் சடங்கவி சிவாசாரி யார் பெண்ணை சுந்தரர் திருமணம் செய்து கொள்ளப் போகும் தருவாயில் சிவபெரு மான் மறையவராகி வந்து தடுத்து நிறுத்தி விட்டார். அதைத் தம் தேவாரத் தில் "அன்று வந்தெனை அகலிடத்தவர் முன் ஆளதாக வென்று ஆவணங் காட்டி" என்றும் இன்னும் பல இடங்களி லும் குறித்திருக்கிறார். பரவையார் என்ற கணிகை மாதையும், சங்கிலியார் என்ற வேளாளப் பெண்ணையும் பின்னர் சுந்தரர் மணந்து கொண்டார்." பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கும் எனக்கும் பற்றாய பெருமானே மற்றாரையுடை யேன்" என்று கூறுகிறார்.

இன்னும் இவர் சேரமானுடன் தோழமை பூண்டது; பொன்னை விருத்தா சலம் ஆற்றில் இட்டுதிருவாரூர் குளத்தில் எடுத்தது, கண் இழந்தது கண் பெற்றது, அவிநாசியில் முதலையிடமிருந்து மதலை யை மீட்டது, வெள்ளையானை மீதேறி திருக்கயிலாயத்துக்குச் சென்றது முதலிய நிகழ்ச்சிகளுக்கு அவர் தேவராத் திலேயே அகச் சான்றுகள் நிறைய இருக் கின்றன. உலகத்தில் இல்லற வாழ்க்கை யில் இருந்து கொண்டு இறைவனை எப்படி அடையலாம் என்பது இவர் வரலாற்றால் நாம் அறிந்து கொள்ளும் பெரிய உண்மை.

ஏழாம் திருமுறையாக வகுக்கப் பெற் றுள்ள தேவார்த்தில் 100 பதிகங்களில் '1026 பாடல்கள் இருக்கின்றன. பல அரியஅருளுரைகளையும் அறிவுரைகளையும் சுந்தரர் தேவாரத்தில் காணலாம். அவர் திருநட்சத்திரமான ஆடிச் சுவாதி 13-8-75 அன்று வருகிறது. அந்த நாளில் அவர் தேவாரத்தை ஓதி, விழாக் கொண்டாடி நாமெல்லாம் உய்வோமாக.

---

## " அருளோசை "

### வினு விடைப் பகுதி மே-75

#### பரிசு பெற்றவர்கள்

| | | |
|---|---|---|
| முதல் பரிசு | : | திரு. வே. அரங்கசாமி, அதிகாரப்பட்டி, தர்மபுரி மாவட்டம், சந்தா எண் 2725 |
| இரண்டாம் பரிசு | : | திரு. முத்துக் கிருட்டிணன் எம்.ஏ.பி.டி. வடமணப்பாக்கம், வடஆர்க்காடு மாவட்டம், சந்தா எண் 2777 |
| மூன்றும் பரிசு | : | திரு. ஆர். கிருஷ்ணமூர்த்தி, எம்.ஏ., கூத்தா நல்லூர் 614101 தஞ்சை மாவட்டம், சந்தா எண். 3145 |
| நான்காம் பரிசு | : | திரு. சி. சண்முகானந்தம், சந்தா எண் 2933 |

# திருமாலின் ஐவகை நிலைகள்

ந. ரா. முருகவேள், எம்.ஏ.,எம்.ஓ.எல்.,

திருமால் நெறிச் சமய நூல்கள், ஆந்தர்யா மித்துவம் பரத்துவம் வியூகம் விபவம் அர்ச்சை என்னும் ஐந்து நிலைகளில், திருமால் விளங்கு வதாகக் கூறுகின்றன. இறைவன் உயிர்களின் உள்ளத்திற் கலந்து மறைந்து நிற்கும் நிலை அந்தர்யாமித்துவம்; திருமகளும் தானுமாய் நித்தியர் முத்தர் சேவிக்கப் பரமபதத்தில் திரு வோலகக்கம் இருக்கும் நிலை பரத்துவம்; திருப் பாற்கடலில் யோக நித்திரை என்னும் அறி துயில் கொண்டு உயிர்களைக் காத்தருளும் வகை களைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கும் நிலை வியூகம்; கொடியோர்த் தெறுதலாகிய துஷ்ட நிக்கிரகமும், செவ்வியோர்க்கு அளித்தல் ஆகிய சிஷ்ட பரிபாலனமும் செய்தருளுவதற்காக இராமபிரான் கண்ணபிரான் முதலிய அவதாரங் களாகத் தோன்றியருளும் நிலை. விபவம்; வழி படும் அன்பர்களுக்கு எளிவந்து அருள் செய் வதன் பொருட்டுத் திருவரங்கம்–திருமலைபெரு மாள் கோயில் முதலிய திவ்விய தேசங்களிலும் அடியார்களின் திருமாளிகைகளிலும் எழுந் தருளி விளங்கும் நிலை அர்ச்சை எனப்படும்.

இவ் ஐந்தனுள். பரத்துவ நிலையை "ஆதியஞ் சோதி உரு" "குழுமித் தேவர் குழாங்கள் கை தொழச் சோதி வெள்ளத்தினுள்ளே எழுவ தோர் உரு" என்றும்; வியூக நிலையினைப் "பாற் கடலில் பையத் துயின்ற பரமன்" என்றும்; விபவ நிலையினை "மீனோடு ஆமைகேழல் அரி குறளாய் முன்னும் இராமனாய்த் தாமோதரனாய் கற்கியும் ஆனான்" என்றும்; அந்தர்யாமித்துவ நிலையினை "ஒண் சங்(கு) கதை வாள் ஆழியான்" ஒருவன் அடியேன் உள்ளான்" என்றும்; அர்ச்சை நிலையினைத் "தமர் உகந்தது எவ் வுருவம் அவ்வுருவம் தானே, தமர் உகந்தது எப்பேர் மற்றப்பேர்–தமருகந்து எவ்வண்ணம் சிந்தித்து இமையா திருப்பரே அவ்வண்ணம் ஆழியான் ஆம்" "பின் ஆனார் வணங்கும் சோதி" என்றும்; அங்காங்கே ஆழ்வார்கள் தம் அருளிச் செயல்களில் குறிப்பிட்டருளினர்,

(1) திருமால், பரம பதத்தில், நித்தியரும் முக்தரும் தமது அனுபவத்திற்குப் போக்கு வீடாகப் பாடும் சாமகானம் கேட்பாராதலின், பரத்துவ நிலை, "பாட்டுக் கேட்கும் இடம்"

(2) அசுரர்களாலும் இராக்கதர்களாலும் துன்புறுத்தி நலியப் படுபவர்களான பிரமன் முதலிய தேவர்களைக் காத்தருள்வதற்கு, அவர் களின் துயர ஒலி எங்கிருந்து எப்போது வரு மோ என்று செவிகொடுத்துக் கொண்டு, திருமால் திருப்பாற் படலில் அறிதுயிலில் அமர்ந்திருக்கும் வியூக நிலை 'கூப்பீடு கேட்கும் இடம்'

(3) அடியவர்களின் துயர ஒலியைக் கேட்ட அளவில் துடித்துக் கொண்டு எழுந் திருந்து, திருப்பாற்கடலிலினின்று ஆதிசேடன் ஆகிய கட்டிலை விட்டு நீங்கி, இவ்வுலகத்திற்கு இழிந்து வந்து அயோத்தி மதுரை முதலிய இடங்களில் திருமால் அவதரிக்கும் விபவநிலை 'குதித்த இடம்'

(4) தாம் நினைத்ததனைத் தலைக் கட்டிக் கொள்ளும் வகையில் 'இனிப் புறம்போகேன், புறம்போதல் ஒட்டேனே' என்று இட்ட அடி பெயரவிடாமல்' அடியார்கள் தன்னைக் கட்டி வளைத்துக் கொள்ளும்படி எளிவந்து, உருவத் திருமேனிகளில் திருமால் உறைகின்ற அர்ச்சை நிலை, 'வளைந்த இடம்'.

(5) அடியார்களின் இதய கமலத்திலே பிரிவற எழுந்தருளியிருந்து, திருமால் தான் உகந்தார்க்குத் தன் அழகினைக் காட்டி நுகரச் செய்து உண்பிக்கும் அந்தர்யாமித்துவ நிலை "ஊட்டும் இடம்". இவ்வாறு இவ்வைந்து நிலைகளையும் பற்றித் திருமால் நெறிச் சான்றோர்கள், இனிய சுவை கெழும விளக்கியருளியிருக்கிறார்கள்.

(1) உயிர்களின் உள்ளத்தில் இருந்து வைத்தும், கண்டு தொழ வேண்டும் என்று விருமபுவர்களுக்குக் கண்களால் காண இயலாமல், யோகநெறி நின்று பயின்று பெரிதும் முயன்றே காண வேண்டும்படி இருத்தலின், அந்தர்யாமித்துவம், நீர் வேட்கை கொண்டவன் வேறு இடங்களுக்குச் செல்ல வேண்டாமல், தான் நிற்கும் இடத்திலே நீர் இருந்ததாயினும், கொட்டும் குந்தாலியும் கொண்டு அகழ்ந்தால் அன்றிக் கிடைக்காதபடி தரைக்கு அடியில் ஆழ்ந்துள்ள தண்ணீர் (பூகத ஜலம்) போல்வது

(2) கண்டு பற்றித் தொழ விரும்புவர்க்கு அணுக இயலாமல் நிலவுலகமாகிய லீலா விபூதிக்கு அப்பாற் பட்டிருத்தலின் பரத்துவம், நீர்வேட்கை கொண்டவனுக்கு அண்டத்திற்கு அப்பால் புறம்பே பெருகிக் கிடக்கின்ற நீர் (ஆவரண ஜலம்) ஒப்பது.

(3) கண்டு பற்ற வேண்டும் என்று ஆசைப்படுவர்களுக்குப் 'பாலாழிநீ கிடக்கும் பண்பையாம் கேட்டேயும்" என்கிறபடி கேட்டிருக்கும் அத்தனையே அன்றிச் சென்று காண அரிய நிலையிலுள்ள வியூகம், இவ்வுலகத்துக்குள்ளேயே இருப்பினும், நீர் வேட்கை கொண்டவர்களுக்குச் சென்று அடைய முடியாத திருப்பாற்கடல் நிகர்ப்பது.

(4) நிலவுலகில் தோன்றிக் கால் தரை தோய நடந்தும், அவ்வக்காலத்தில் வாழ்ந்தவர்கள் மட்டுமே பயன் கொள்ளத்தக்கதாய், இக்காலத்திலுள்ளோர் கிட்ட இயலாத விபவம் மிக அருகில் இருந்தும் ஓடுங்காலத்தில் இருந்தவர்கள் மட்டுமே பருகலாம் படியாய், வற்றிப்போன காலத்தில் இருப்பவர்க்குப் பயன்படாத பெருக்காறு போன்றது.

(5) முற்கூறிய நிலைகளைப் போல அரியதும் சேயதுமாகாது, எல்லோர்க்கும் எளியதும் இனியதுமாய் அனைவர் கண்ணுக்கும் புலப்பட்டு நின்று, கோயில்களிலும் இல்லங்களிலும் திருமால் எழுந்தருளி நிற்கும் அர்ச்சை நிலை, முற்கூறிய பலவகை நீர்களைப் போலல்லாமல், எளிதாகச் சென்று இனிதாகப் பருகலாம்படி தேங்கி நிற்கும் மடுவின் நீர் போல்வது.

இனி வேறொரு வகையிலும், திருமாலின் இவ் ஐந்து நிலைகளின் இயல்பினைக் குறிப்பிடலாம். பரத்துவநிலை, எட்டாத வானத்தில் உள்ள மேகநீர் (ஜீமுதஜலம்); வியூக நிலை உண்ணற்கியலாத கடல்நீர் (சாரசலிலம்);விபவ நிலை ஓடிக்கழிந்த ஆற்றுநீர் (சரித்சலிலம்); அந்தர்யாமித்துவ நிலை பெருகக் கூடிய கிணற்று நீர் (கூபபயஸ்); அர்ச்சை நிலை அள்ளி எடுத்து உண்ணும்படி நிறைந்து நிற்கும் குளத்துநீர் (வாபீபயஸ்) என்றும், பெரியோர்கள் இவற்றின் இயல்பினை விளக்கியருளியிருக்கின்றனர்.

இங்ஙனம் பெரியோர்களால் விளக்கப் பெற்றிருக்கும் திருமாலின் ஐவகை நிலைகளையும் பற்றி,

"விண்மீது இருப்பாய்; மலைமேல்
நிற்பாய்; கடல் சேர்ப்பாய்;
மண்மீது உழல்வாய்; இவற்றுள்
எங்கும் மறைந்து உறைவாய்
எண்மீது இயன்ற புற
அண்டத்தாய்; எனது ஆவி
உன்மீது ஆடி உருக்
காட்டாதே ஒளிப்பாயோ?

என்று நம்மாழ்வார், தம்முடைய திருவாய்மொழிப் பாசுரம் ஒன்றில், அழகுறக் குறிப்பிட்டருளியிருக்கின்றார்.

இதன்கண், 'விண்மீதிருப்பாய்' என்றது பரத்துவநிலை; 'கடல்மீது சேர்ப்பாய்' என்றது வியூக நிலை; 'மண்மீது உழல்வாய்' என்றது விபவநிலை; 'எங்கும் மறைத்தாய்' என்பது அந்தர்யாமித்துவநிலை; 'மலைமேல் நிற்பாய்' என்பது அர்ச்சை நிலை என்பவற்றை, முறையே குறித்தல் உணர்ந்து இன்புற்று மகிழலாம்.






## மாலையும் வந்தது மாயன் வாரான்

ஆயர்பாடிக்கு அணிவிளக்காகவும், கோவலர் தம் குலக் கொழுந்தாகவுமுள்ள கண்ணன் எங்கே? குயில்கள் கூவிக் குலாவும் சோலையில் மயில்களும் ஒய்யாரமாக நடனமாடுகின்றன. மல்லிகையின் வாடையைத் தூவிக்கொண்டு மாலைக்காலமும் வந்தது? ஆனல் மாயன் வரவில்லை. தலைவி பெருமூச்சுவிடுகிருள். மாலை மதயானைபோல் வருகின்றதே என்று ஏங்குகின்ருள் மயிலும் குயிலும் மகிழ்ச்சியைத் தரவில்லை. காலையில் பசு மேய்க்கப் போன கண்ணன் மாலையாகியும் வரவில்லையே என்று மயங்குகிருள். காட்டில் கண்ணனுக்கு என்ன ஆபத்தோ என்று கலங்குகிருள். அவன் வராதது அவளுக்குத் தாபத்தை மிகுதிப் படுத்தியது. விரக வேதனையால் மெலிந்துழலும் தலைவியைத் தோழிகள் தேற்றுகின்றனர். அவள் தாபத்தைப் போக்க மலர்ப்படுக்கையில் அவளைப் படுக்கவைக்கின்றனர்.

ஆயினும் தாபம் குறையவில்லை. மாருக மிகுவதாயிற்று. பசுக்கூட்டங்களும் திரும்பி விட்டன. கன்றுகளை நினைந்து அவை எழுப்பும் ஒலிகளும் காதில் விழுகின்றன. கூடுங்கால் இன்பம் துய்ப்பதற்குத் துணைபுரிந்த அத்தனைப் பொருள்களும், பிரிவின்கண் கங்கு கரையில்லாத் துன்பத்தை எழுப்பி விடுகின்றன. இளந்தென்றலும், தண்மதியும், அந்திமாலைச் சிறப்பும் தலைவனை விட்டுப் பிரிந்த தலைவியை வாட்டுகின்றன. அந்த அந்திமாலைநேரத்தில் அதற்கு முந்தினநாள் கண்ணன் குழலூதிய காட்சி அவள் நினைவுக்கு வந்தது. செங்கண் கோடவும், செய்யவாய் கொப்பளிக்கவும், புல்லாங்குழலைக் கண்ணன் தன் மெல்லிய சிறு விரல்களால் தடவிப் பரிமாறவும், அவன் முடியில் அணிந்திருந்த மயில் தோகை அசையவும் கோவிந்தன் குழலோசையைக் கேட்கிருள்.

கண்ணன் குழலூதும் போதே அவன் கண்கள் ஏதேதோ தூது மொழிகளைப் பேசினவாம். அவன் இசைத்த பாடலின் இசை அவளை ,மயக்கச் செய்தால் பரவாயில்லை. மாளவே செய்து விட்டதாம், அவ்வளவு காதலை நோவை-பைத்தியத்தை அக்குழலோசை உண்டாக்கிவிட்டது. இப்படிப் படாதபாடு படுத்திய கண்ணன் இன்று, மாலையாகியும் வரவில்லையே என்று ஏங்குவதாக அப்பாடல் உணர்த்துகின்றது. பாடலைப் பாடிய தலைவி யார் தெரியுமா? நம்மாழ்வாராகிற பார்ாங்குச நாயகியே, பாட்டைப் பாருங்கள்.

"ஊதுமத் தீங்குழற்கே உய்யேன்நான் அது
மொழிந் திடை யிடைத்தன் செய்கோலத்
தூதுசெய் கண்கள் கொண்டு ஒன்றுபேசி
தூமொழியிசைகள் கொண்டு ஒன்று
நோக்கிப்
பேதறுமுகஞ் செய்து நொந்து நொந்து
பேதை நெஞ்(சு) அறஅறப்பாடும் பாட்டை
யாதுமொன்றறிகிலம் அம்ம! அம்ம!
மாலையும் வந்தது மாயன் வாரான்!"

கா. அ. மணவாளன், எம். ஏ., பிஎச்.டி.

இப்பாடலின் அழியாவனப்பும், கற்பனைச் செறிவும், சொல்நயமும் நம் உள்ளங்களைக் கொள்ளை கொள்ளுகின்றன. "வாய் பார்க்கின்றது; கண்கள் பேசுகின்றன" என்ற மாருன அழகுச் சித்திரத்தை எழுப்பிய நம்மாழ்வாரின் கவித்திறனை என்னென்று மொழிவது.

இப்படித் தன்னால் விரும்பப்படும் கண்ணன் எம்பெருமானை காதலித்த தலைவியாகிய நம்மாழ்வார், அவன் அருட்காட்சி மறைந்த பொழுது இருள் வெள்ளத்தில் தனித்து நிற்பதாக உணர்கின்ருர். மாலை மறைந்து இரவாகியது. அந்த இரவோ நீண்டு கொண்டே போகிறது என்கிருர். ஊரெல்லாம் உறங்கி உலகெல்லாம் நள்ளிருளாய் நீண்ட அந்நேரத்திலாவது, என் கண்ணன் வாரானோ! என் செல்வன் வாரானோ! என்று நம்மாழ்வாராகிற நாயகியின் உள்ளம் ஏங்குகிறது. நள்ளிருளாய் நீளும் அவ்விரவினுக்கு விடிவு இல்லையோ? சூரியனும் வாராமல் எங்கே போய் ஒளிந்துக் கொண்டான்? ஒருக்கால் இப்பெண் படும் பாட்டை–துன்பத்தைக் கண்டு பொறுக்க மாட்டாமல் எங்காவது போய் ஒளித்துக் கொண்டானோ? என்தாயும், மற்ற தோழிமார்களும் ஒரு கவலையுமின்றி உறங்குகிருர்களே! இந்நீளிரவில் என் உயிரைக் காப்பாற்றுவார் ஒருவருமில்லையே! என்றெல்லாம் ஏங்கிய ஆழ்வாராகிற நாயகியின் உள்ளம் தன்னைப் போல் துன்பப்படுகின்ற பனிக்காற்றையும் இரவு பகல் உரக்கமின்றித் தவிக்கும் கடலையும் நினைக்கின்றது–ஒளியிழந்து. கலைகுறைந்து காணப்படும் சந்திரனும் கண்ணன் கலவி கிடைக்காமல்தான் கரைந்துவிட்டானோ என்று கருதுகின்றது. மேகமும் கருத்து இருளாய் முடிக்கின்றதே! என்றும், பின்பு சிறிது நேரத்தில் மழைபொழிந்தவுடனே ஐயோ! நீயும் என்னைப்போல் விரகவேதனையால் அழுகிருயோ என்றும், இப்படிப் பலவிதமாகத் தன்னைப் போலவே துன்புற்றுக் கிடக்கின்றன என்று இயற்கையாய் நிகழும் செயல்களுக்கெல்லாம் காரணம் காட்டிப் பேசுவனவாக ஆழ்வாருடைய பாடல்கள் காண்கின்றன அவைகளைக் காண்போம்.

"ஊரெல்லாம் துஞ்சி
உலகெல்லாம் நள்ளிருளாய்
நீரெல்லாம்தேறி ஒர்
நீளிரவாய் நீண்டதால்"

"காவிசேர் வண்ணன் என்
கண்ணனும் வாராஞல்"

"பெண்பிறந்தார் எய்தும்
பெருந்துயர் காண்கிலன் என்று
ஒண்சுடரோன் வாராது ஒளித்தான்"
நின்றுருகு கின்றேனே
போல, நெடுவானம்
சென்றுருகி நுண்துளியாய்ச்
செல்கின்ற கங்குல்"

என்றெல்லாம் இப்பாடல்களால் பராங்குச நாயகி கண்ணனுகிற தலைவனைக்காமுற்றுப் பாடியுள்ளாள்.

இவ்விதம் பாடிய தலைவி வீட்டிற்குள்ளே புகுந்தாள். அங்கே விளக்கு எரிந்து கொண்டிருப்பதைப் பார்க்கிருள். ஏ! தீபமே! நீயும் அந்தக் கண்ணன் கண்ணழகில் ஈடுபட்டுத்தான் வெந்து கொண்டிருக்கிருயோ? என்று கேட்கிருள்? அவன் பேச்சிலும், தலைமாலையிலும் மயங்கித்தான் எரிகிருயோ! என்றும் கேட்கிருள்.

செந்தாமரைத் தடங்கண்
செங்கனிவாய் எம்பெருமான்
அந்தாமத் தண்துழாய்
ஆசையால் வேவாயே

என்பதே அவ்வரிகள். இவ்வரிகளில்தான் எத்தனை அழகு!

இப்படிப் புலம்பும் மகளைத் தாய் பார்க்கிருள். இவளுக்கு ஏதோ பைத்தியம் பிடித்து விட்டது. இது என்ன நோயோ அறியேன்; அல்லது பேய்தான் பிடித்தாட்டுகிறதா என்று புலம்புகிருள். ஆட்டைப் பலியூட்டிக் குறிகேட்க முனைந்தாள். வீட்டு வாசலில் ஒரே கூட்டம். கொட்டி முழக்கித் தெய்வங்களை வரவழைக்கின்றனர். இக்காட்சிகளைக் கண்ட தோழிமார்களுக்கு வேதனையாக இருந்தது. அவர்கள் ஒன்றுகூடி அந்த மூடநம்பிக்கைகளைக் கண்டித்துப் பேசுகின்றனர்.

"இதுகாண்மின் அன்னைமீர் இக்கட்டு
விச்சிசொல் கொண்டு நீர்
எதுவானும் செய்(து) அங்கோர் கள்ளும்
இறைச்சியும் தூவல்மின்"

என்று புத்திமதி சொல்லித் தடுத்து நிறுத்துகின்றனர். மேலும் உன்மகள் கொண்ட நோய் தெய்வநோய் என்றும் கூறினர். பின்பு மெதுவாகக் காதலியும் தானுற்ற நோயைத் தாயார்க்குச் சொல்லுகிருள்.

அம்மையே! பெண்களை உண்ணும் அக்கண்கள் யமனோ? கண்கள் தாமோ தெரியவில்லையே என்றும், நோக்கும் திசையெல்லாம் அந்த வாயும். மின்னல் போன்ற அப்புன்சிரிப்பும் ஒளிபொருந்திய முகமும் என் உயிரை ஈர்க்கின்றனவே என்றும் விவரமாக-ஆனால் தைரியமாகச் சொல்கிறாள்.

இனி யார் எப்படி நினைத்தால் என்ன? இவ்வூர் நிந்தை என்னை என் செய்யும்? என்று கேட்கிறாள். "தாமரைக் கண்களோடும், செங்கனிவாய் ஒன்றினோடும் செல்கின்றது என் நெஞ்சமே" என்று பகிரங்கமாகத் தன் காதலை வெளிப்படுத்தி விடுகிறாள். 'இவள் நெஞ்சம் இவள் வசமில்லை' என்று தோழிமார்களைப் போன்று தாய்மார்களும் உணர்ந்து கொண்டார்கள்.

தாய்மார் ஒருவாறு தேறித் தம் பெண்ணின் செயல்களையெல்லாம் கூர்ந்து கவனிக்கத் தலைப்படுகின்றனர். தன் மகள் நாளுக்குநாள் ஒளியிழந்து உடம்பு மெலிந்து வருவதையும் காண்கின்றனர். இப்படித் தம் மகளுடைய தன்மைகளைக் கண்ட தாயார் மற்றப் பெண்களிடம் அவளுடைய செயல்களைப் பற்றிக் கூறுவனவாக அமைந்த தாய்ப்பாசுரத்தைப் பாருங்கள்,

மண்ணை யிருந்து துழாவி
வாமனன் மண் இது என்னும்
விண்ணைத் தொழுது அவன்மேவு
வைகுந்தம் என்று கைகாட்டும்
கண்ணை உள்நீர் மல்க நின்று
கடல் வண்ணன் என்றும்; அன்னே! என்
பெண்ணைப் பெருமயல் செய்தார்க்கு
என் செய்கேன் பெய்வளையீரே!

என் மகளுக்கு மண்ணும் விண்ணும் காதலனை ஞாபகப்படுத்துகிறது; கடலோ அவனுடைய நிறத்தையும் அழகையும் நினைவுபடுத்துகிறது; இப்படிப் பெரும் பித்தாய்த் திரியும் படித்தன் அழகாலே மயக்கினவர்க்கு யான்என் செய்வேன் என்று மற்றப் பெண்களிடம் ஆலோசனை கேட்பதுபோல அமைந்த ஆழ்வாரின் தாய்ப் பாசுரங்கள் எல்லோருடைய உள்ளத்தையும் கொள்ளை கொள்ளுவனவாக அமைந்துள்ளன.

சில நீருண்ட மேகம் மழையைப் பொழியும். அம்மழையைக் கண்டவாறே நாரணன் வந்துவிட்டான் என்று மகிழ்வாளாம். முழுநிலாவைக் கண்டால் கேட்கவே வேண்டியதில்லை. முற்றிலும் தன்னை மறந்து ஒளி மணிவண்ணனே என்று உரக்கக் கூவுவாளாம். நின்ற குன்றினைக் கண்டாலோ 'நெடுமாலே என் அருகில் வா' என்பாளாம்.

இவ்விதம் பார்க்கும் பொருள்களையெல்லாம் கண்ணனாகவே எண்ணி மயங்கும் காதலிக்கு உண்மையில் அக்கண்ணன் காட்சி வழங்கவில்லையே என்ற ஏக்கம் இருந்திருக்க வேண்டும். எங்கும் நோக்கிக் கண்ணனைக் காணாமல் தலைவி வெப்பப் பெருமூச்சு விடுகிறாள். அந்த நிலையிலும் அவளுடைய ஆசை பேசாமலிருக்க முடியவில்லை. மறுபடியும் 'கண்ணா' என்று கூவுகிறாள். 'பெருமானே வா' என்று அழைக்கின்றாள். இத்தகை மகளைக் காணும் எந்தத் தாயின் மனம்தான் இரங்காமலிருக்கும்.

"நையுங்கண்ணீர் மல்க நின்று
நாரணன் என்றும் அன்னே! என்
தெய்வ வுருவிற் சிறுமான்
செய்கின்றது ஒன்றறியேனே"

என்ற வரிகளில் 'தெய்வ உருவிற் சிறுமான்' என்று தன் அருமை மகளைப் பாராட்டி இருப்பதைக் காணலாம். அத்தகைய அருமை மகளுக்காக அவளால் விரும்பப்படும் ஆணழகனான கண்ணன் எம்பெருமான் படுத்துறங்கும் திருவரங்கத்திற்குச் சென்று

"செழுந்தடம் புனல்சூழ் திருவரங்கத்தாய்
என்செய்கேன் என் திருமகட்கே"

என்று பாடி அவனருளை வேண்டி நிற்கும் நம்மாழ்வாரின் பண்ணார் தமிழிசையைப் பாடிப் பரவுவோமாக.



பட்டி மன்றம்

# திருக்கோயில் கருவறைக்குள் சென்று இறைவனுக்குப் பூவும் நீரும் இட்டு வழிபாடு செய்யும் உரிமை சீலமுடைய அனைவருக்கும் உண்டா இல்லையா?

## உண்டு-என்று வாதிடுகிறார்

திரு. ம. கார்மேகம் எம். ஏ.

இன்று மேடைப் பட்டி மன்றங்கள் பல்கிப் பெருகிப் புகழ் பெற்றிருக்கின்றன. எழுத்துப் பட்டி மன்றம் என்பது புதியது. ஆயினும் மேடைப் பட்டி மன்றத்தை விட எழுத்துப் பட்டி மன்றம் கருத்தை மேலும் வற்புறுத்தத் துணை செய்யும்.

இறைவன் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில் கருவறைக்குள், சாதி வேறுபாடில்லாமல் அனைவரும் சென்று வழிபடலாம் என்ற கருத்தை நான் இங்கே வலியுறுத்த விரும்புகிறேன் உலகம் முழுவதற்கும் இறைவன் பொதுவானவன் என்பதில் யாருக்கும கருத்து வேறுபாடு இருக்கக் முடியாது. இறைவன் தாயாகவும் தந்தையாகவும் உலக உயிர்களுக்குத் தண்ணளி சுரப்பவன் "அப்பன் நீ, அம்மை நீ" என்பார் அப்பரடிகள் 'அம்மையே அப்பா' என்று அழைப்பார் மாணிக்கவாசகர். ஆக, அம்மையும் அப்பனுமாக இறைவன் எழுந்தருளியிருக்கிறான். என்பதே ஒப்ப முடிந்த முடிவு. இறைவன் எல்லாருக்கும் தாயும் தந்தையுமானால் அவனை வழிபடும் உரிமை மனிதராகப் பிறந்த அவன் குழந்தைகள் அனைவருக்கும் பொதுவுரிமை. இந்த உரிமை மனிதனின் பிறப்புரிமை.

உலகில் சமயங்கள் பலவாக வேறுபட்டுள்ளன. இந்து சமயம் உலகச் சமயங்கள் அனைத்துக்கும் முந்தியது. சமயம் என்பது மக்களின் உணர்வைச் சமைத்துப் பக்குவப் படுத்துவது என்பது தவத்திரு. அடிகளார் அவர்களின் கருத்து. இந்தக் கருத்து புதிய தன்று; பழமையானதே மக்களைப் பக்குவப் படுத்துவது சமயமானால் அப்பக்குவத்துக்கு வாயிலாக அமைந்தது. அடிப்படையாக அமைந்தது வழிபாடே. இந்து சமயத்தில் மனிதனின் பிறப்புரிமையாகிய வழிபாடு செய்து கொள்வதில் சாதி வேறுபாடுகள் பழங்காலத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. ஆயினும் இந்து சமயத்தில் இடைக் காலத்தில் சாதி வேறுபாட்டைக் கற்பித்தவர்கள் சமூகத்திலிருந்து தம்மை உயர்த்திக் கொண்டவர்கள்; மற்றவர்களைத் தாழ்த்தி வைத்தார்கள். மனித குலம் அனைத்தையும் ஏற்றத் தாழ்வின்றி நோக்கும் இயல்பே சான்றோர் இயல்பு. ஆனால் மற்றவர்களைத் தாழ்த்தித் தம்மை உயர்த்திக் கொண்டவர்கள் தம்மைச் சான்றோர்கள் அந்தணர்கள் என்று பிரித்துத் தனிமைப் படுத்திக் கொண்டது வியப்பினும் வியப்பே. அது மட்டுமன்றிச் சாதிப் பிரிவுகள் பற்பல செய்து அவர்கள் சழக்காடினர். இந்தச் சழக்கினால் இந்து சமயம் சாதி வேறுபாட்டினால் பிளவு பட்டுத் தன் சிறப்புக் குன்றி விட்டது. இந்த நிலையில் அவ்வப் போது தோன்றிய சான்றோர் பெருமக்கள் சாதி வேறுபாட்டினைக் கடிந்து வந்துள்ளனர். அவர்கள் சாதியுணர்வற்ற சமுதாயம் அமைக்க விரும்பினர். திருவள்ளுவரும், அப்பரடிகளும், திருமூலரும், மாணிக்கவாசகரும், வள்ளல் பெருமானும் வெறுத் தொதுக்கிய சாதி முறை இன்றும் ஒழியவில்லை. இது இந்து சமயத்திற்கு-இந்து சமய நெறிக்கு ஒவ்வாதது. ஆக, இந்து சமயத்தில் ஆழ்ந்த பற்றுடையவர்கள் சாதி வேறுபாட்டை ஒழித்தே தீர வேண்டும் அந்தப் பணி காலத்தால் செய்ய வேண்டிய இன்றியமையாப்பணி; சாதி ஒழிந்தாலொழிய நமது சமயத்திற்கு எதிர் காலச் சிறப்பில்லை.

ஆனால் இந்து சமயத்தின் தலைமைச் சாதியினர் என்று கூறிக் கொள்ளுவோர் சாதி ஒழிப்பை வாயளவில் பேசுகின்றனரே யன்றி ஒழிப்பதற்கு முயற்சி செய்தாரில்லை. இதன் விளைவாக இப்போது திராவிடக் கழகத்தினர் திருக்கோயில் கருவறைக்குள் எல்லாரும் செல்ல வேண்டும் என்று போராட்டம் நடத்தப் போவதாக ஒரு செய்தி அறிவிக்கப்பட்டிருக்கிறது. இது வேடிக்கையான செய்தி! இந்து சமயத்தைச் சார்ந்தவர்களுக்கு ஒரு சவால்! திருக்கோயிலில் சாதி வேறுபாட்டை வளர்த்து வந்த சமய நெறியாளர்க்கு ஓர் அறை கூவல். கடவுள் நம்பிக்கை யில்லாதவர்கள் திருக்கோயில் முறையில் சீர்திருத்தம் செய்ய வருகிறார்கள். இது நெஞ்சு வெடிக்கும் வேதனைச் செய்தி. ஆயினும் இந்து சமயத்தவர் இது பற்றிக் கவலைப் பட்டதாகத் தெரியவில்லை. சமய வாதிகளில் சிலர் 'இது அடாத செயல்' என்று கொக்கரிக்கின்றார்கள். ஆனால் சாதியை ஒழிக்க மறுக்கின்றனர். இந்த நிலையில் நாம் செய்ய வேண்டுவதென்ன?

சமயச் சான்றோர்கள் காட்டிய வழியை நாம் கடைப்பிடிப்பது தான் ஒரே வழி. சாதிவேறுபாடில்லாமல் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனை எல்லோரும் சென்று பூவும் நீரும் இட்டு வழிபடுவதே இதற்குரிய ஒரே வழி அது மட்டுமன்றி முன்னர்க் குறிப்பிட்டது போல இந்த உரிமை பிறப்புரிமை யாகவும் இருக்கிறது. இந்த முறையையும் இந்து சமயத்தின் சிலர் ஏறறுக் கொள்வதாக இல்லை. இவர்கள் இந்து சமயத்தைக் ,காப்பாற்றப் போவதாக விளம்பரம் செய்து கொண்டிருக்கின்றனர்கள். ஆனல் துர்ப்பாக்கிய வசமாக இந்து சம்யத்தை வீழ்த்திக் கொண்டிருப்பவர்களும் இவர்களே. இவர்களுடைய உண்மை நிலைதான் என்ன? இவர்களுக்குச் சமயத்தைப் பற்றிக் கவலையில்லை; சாதி முறையைக் காப்பாற்றுவதே இவர்களுடைய கவலை. அதன்வழி உலகியல் இலாபம் கருதியதே என்று தான் நம்மால் விளங்கிக் கொள்ள முடிகிறது. இந்தக் கொள்கையினர் உண்மையில் சமய விரோதிகளே என்ருல் மறுக்க முடியுமா ?

எல்லாரும் திருக்கோயில் கருவறைக்குள் சென்று பூவும் நீரும் இட்டு வழிபடுவது ஒன்று தான் சமயத்தைக் காக்கும்; சாதி வேறுபாட்டை ஒழிக்கும் சமய ஞானத்தை அனைவருக்கும் வழங்கும் என்பது அருள்நெறித் திருக்கூட்டத்தாரின் கொள்கை. இந்தக் கொள்கையை நான் வழிமொழிந்து வற்புறுத்துகிறேன். இந்தக் கொள்கையை மறுப்பவர்கள் அது ஆகம நெறிக்குமாருன தென்று கூறுகின்ருர்கள். இது எவ்வாறு என்பது புரிந்து கொள்ள முடியவில்லை.

மிகப் பழங்காலத்தில்—நால்வர் பெருமக்கள் காலத்தில் பூவும் நீரும் இட்டு வழிபடும் உரிமை எல்லாருக்கும் இருந்தது என்பதற்கு வலிமையான சான்றுகள் பல உள்ளன. திருக்கோயில்கள் ஆகம முறைப்படி உள்ளதால் இது பொருந்தாது என்று கூறி வருகின்றனர். அப்பர் பெருமான்,

" ஆக்கையாற் பயனென்—அரன்
கோயில் வலம் வந்து
பூக்கையா லட்டிப் போற்றி என் னுத இவ்
ஆக்கையாற் பயனென் "

என்று கூறுகிருர். அப்பர் காலத்தில் இருந்த திருக்கோயில்கள் ஆகம முறைப்படி இருந்த திருக்கோயில்கள் தாமே! அந்தத் திருக்கோயில்களை வலம் வந்து கையில் பூவேந்தி வந்து அந்தக் கோயிலில் எழுந்தருளியுள்ள பெருமானுக்கு அந்தப் பூவினையிட்டு வழிபாடு செய்து கொள்ளாத உடம்பினல் பயனென்ன? என்பது அப்பரடிகள் கருத்தானல் மறுப்பவர்கள் கூறும் கருத்து எந்த அளவிற்குப் பொருந்தும்? சிவகோசாரியார் ஆகம முறைப்படி பூசனை செய்த திருக் காளத்தியப்பனை ஆகம நெறியறியாத கண்ணப்ப நாயனர் சென்று, உச்சி போந்து ஆரத் தழுவி வழிபட்டாரே அப்போது இந்த ஆகமங்கள் தடையாக இல்லையா? ஆகம விதிக்குக் கண்ணப்ப நாயனர் பூசனையைப் பெருமான் ஏற்றுக் கொள்ள வில்லையா? மாருக, சிவகோசாரின் ஆகம விதிப் பூசனையினும் கண்ணப்ப நாயனர் பூசனை உயர்ந்தது என்று இறைவனே உவந்தானே. ஆகம முறைப்படி பூசனை செய்த சிவகோசரியாரே, கண்ணப்பர் வந்து பூசனை செய்வதை மறுத்ததாக-வெறுத்தாகயில்லை. பூசனை செய்த புலால் கிடப்பதைக்கண்டு தானே மனம் வெறுத்தார். இந்தப் பெரிய புராணச் செய்தியை அவர்கள் மறுப்பார்களா?

நாட் பூசனை செய்து, இறைவனை எழுந்தருளச் செய்து, மற்றவர்கள் வழிபாட்டுக்கு ஏற்பாடு செய்து வைக்கும் பணியினைத் தான் அன்றைய சிவாசாரியர்கள், குருக்கள் முதலானேர் செய்து வந்திருக்கிருர்கள். அந்த முறையினை இங்கு நான் மறுக்கவில்லை. அவர்கள் தொடர்ந்து அவ்வகையில் செயற்படட்டும். ஆனல் மெய்யன்பர்கள் சமய நெறியினைத் தூய்மையாகப் பின்பற்றுபவர்கள்—மெய்ம்மைச் சமய அடியார்கள் கருவறைக்கும் சென்று, சிவாசாரியர்களால் எழுந்தருளச் செய்யப் பெற்ற ஆண்டவனுக்கு பூவும் நீரும் இட்டு திருவடி தொட்டு வணங்குவதே நமது தூய தமிழ்ச் சமய நெறி. காசியில் விசுவநாதர் ஆலயத்திலும் தமிழகம் தவிர்த்த பிறமாநிலங்களிலும் அவ்வாறு நடை பெறுகின்றதே, தமிழகத்தில் மட்டும் ஏன் கருவறைக்குள் சென்று பூவும் நீரும் இட்டு வணங்கக் கூடாது?

வழிபாட்க்டுகு அன்பு அடிப்படை. அன்பில்லாத வழிபாடு வெறும் சடங்கே. அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் என்ருர் திருவள்ளுவர். இவர்கள் அன்பிற்கு அடைக்குந்தாழ் இடுகின்ருர்கள் என்பது தானே கருத்து. சிவகோசரியார் அந்தணக் குலத்தினர். கண்ணப்ப நாயனர் புலால் உண்ணும் வேட்டுவக் குலத்தினர் இறைவனைத் தொட்டு வழிபாடு செய்து கொள்வதில் சாதி வேறுபாடு தடையில்லை என்பதற்கு இஃதோர் அரண். வழிபாட்டுக்கு உணர்வு தான் முக்கியம். உணர்வற்ற வெறும் சடங்குச் செயல்களால் பயனென்ன? வெறும் சடங்கு தான் வழிபாடென்ருல் அதனை இறைவன் ஏற்றுக் கொள்வானு? இறைவன்,

" பொக்க மிக்கவர் பூவும் நீரும் கண்டு
நக்கு நிற்பன்"

என்று பேசுகிருர். எல்லாரும் பூவும் நீரும்

சென்று இறைவனை வழிபட்டார்கள் என்பதற்கு இஃதொரு சான்று. அஃதாவது புறத்தோற்றத்தால் பக்தர்கள் போல்வாரும, வாழ்வியலில் நெறிப் படாதோரும் கூடப் பூவும் நீரும் எடுத்துக் சென்றதாகக் குறிப்பில் உணரலாம். பொக்க மிக்கவர் அந்தணர் குலத்திலும் உண்டு; பிற குலத்தினரிலும் உண்டு. அவர்தம் பூசனையை இறைவன் ஏற்பதில்லை. பொக்க மிக்கவர் என்று கூறிய அப்பரடிகள், கீழ்ச் சாதியினரில் சிலமுடையோர் எடுத்துச் செல்லும் பூவும் நீரும் கண்டு நக்கு நிற்பன் என்று கூறவில்லையே! கண்ணப்ப நாயனார் பொக்கமிக்கவரல்லர்; புண்ணிய சீலர்.

எல்லாரும் இன்புற்றிருக்க எழுந்த சமயத்தில் சாதிப் பிரிவினைகள் வழி, வழிபாட்டுரிமை மறுக்கப் படுமானால் எல்லாரும் இன்புற்றிருப் து என்பது எவ்வாறு கூடும்? வாய்ப் பந்தல் போடும் வன்கணாளர்கள் சற்றே சிந்தித்தல் வேண்டும். சாதி வேறுபாட்டை சமயச் சான்றோர்கள் வெறுத்தனர். ஆனால் அந்தச் சமயச் சான்றோர்களின் வழியைப் பின் பற்றுவதாகக் கூறிக் கொள்பவர்கள் திருக்கோயிலுக் குள்ளும் சாதி வேற்றுமை பாராட்டுகின்றனர். இதற்குக் காரணமென்ன? இது அவர்களின் சுயநலம் என்று இங்கே கூறினால் அவர்களுக்குக் கோபம் உண்டாகும். ஆனால் வேறு வகையாக அவர்களைப் பற்றிக் கூறுவதற்கு வார்த்தை கிடைக்க வில்லை.

இறுதியாகச் சில கேள்விகளை அவர்கள் முன் வைக்கிறேன். இறைவன் எல்லாருக்கும் தாய்தந்தை என்று ஒப்புக் கொள்வார்களானால் அவன் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலில் கருவறைக்குள் செல்லும் உரிமை அவன் குழந்தைகளாகிய எல்லோருக்கும் இல்லையா? பூவும் நீரும் கொண்டு அவனை வழிபடச் செல்லும் உரிமை சிலருக்கு மட்டுமே சொந்தமா? சீலத்தால் உயர்ந்தவர்களுக்குச் சொந்தமா? கண்ணப்ப நாயனாரைச் சமயச் சான்றோர் என்று இவர்கள் ஏற்றுக் கொள்கின்றார்களா? இல்லையா? யானையும் எறும்பும் சிலந்தியும் நண்டும் பூசித்தாகப் புராணங்கள் கூறுகின்றனவே, மனிதனாகப் பிறந்தவனுக்கு அந்த உரிமை இல்லையா? அந்த உரிமை அவனுக்கு இல்லையென்றால் அவற்றினும் இவன் கீழானவனா? தமிழ் நாட்டுத் திருக்கோயில்களில் மட்டும் தானே இந்த நிலைமை. காசியில் எழுந்தருளியுள்ள விசுவநாதப் பெருமானைச் சாதி வேறுபாடின்றி அனைவரும் சென்று பூவும் நீரும் இட்டு வழிபடும் வழக்கம் இருக்கிறதே. தமிழ் நாட்டில் மட்டும் ஏன் இந்த நிலைமை? இந்தக் கேள்விகள் செருக்கில் தோன்றிய கேள்விகளல்ல. இந்து சமயத்தைச் சார்ந்தவன் என்பதால் எழுந்த கேள்விகள். இந்தக் கேள்விகளுக்குப் புரிந்து கொள்ளத் தக்கவாறு விடையளிப்பது" சமய நெறியில் நிற்போர் கடமை.

ஆக, திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனைச் சாதி வேறுபாடின்றி இறைவன் பால் பக்தியுள்ள அனைவரும் சென்று வழிபட வேண்டுமென்பதே சமயத்தின் உண்மைக் கருத்தாகும் என்பதை வலியுறுத்துகிறேன். சாதி வேறுபாடு இந்து சமயத்தைச் சார்ந்தவர்களிடம் தான் இருக்கின்றது. உலக மதங்களில் பிற மதங்களுக்கில்லாத இந்தத் "தற்பெருமை ஏன்? "யான் எனது என்னும் செருக் கறுப்பான் வானோர்க் குயர்ந்த உலகம் புகும்" என்பது வள்ளுவர் வாக்கு. அகப் பற்றும் புறப்பற்றும் நீங்கி வாழ்வதே சமய வாழ்வானால் சாதிப் பற்று இதற்கு அப்பாற் பட்டதா? சாதிப் பற்று தான் சமயப் பற்றா? இறைவன் பற்று சமயப் பற்றா?

இந்த கேள்விகளுக்கு இந்து சமய இளைஞர் உலகம் இந்து சமயப் பெரியோர்களிடத்திலிருந்து பதிலை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது.

குறிப்பு: இல்லை என்று வாதாடி நேயர்கள் கட்டுரை எழுதி அனுப்பலாம்.

—ஆசிரியர்.

---

ஒரு திருத்தம்.

அருளோசை சூன்மாத இதழில் தமிழகத்தில் விநாயகர் வழிபாடு என்னும் கட்டுரையை வெளியிட்டமைகது மிக்க நன்றி. அக்கட்டுரையில் "வாதாபியிலிருந்து கொண்டு வரப்பட்ட கணேசர் சிற்பம் கரந்தையில் உள்ளது' என்று நான் தவறாகக் குறிப்பிட்டுள்ளேன். (பக்கம்346, பத்தி2) இச்சிற்பம் 'திருச்செங்காட்டன்குடி' யிலுள்ளது என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். தவறாகக் குறிப்பிட்டமைக்கு மிகவும் வருந்துகிறேன்.

—கட்டுரை ஆசிரியர்.

உ

# 'என் செய்வான் தோன்றினேன்'

டாக்டர். அ. மா. பரிமணம் எம்.ஏ., எம். லிட். பிஎச். டி.,

பழந்தமிழர் உயிர்களை அவை பெற்றிருக்கும் பொறி உணர்வுகளுக்கு ஏற்ப உயிர்களை வகைப்படுத்திக் கண்டு இலக்கணம் கூறியுள்ளார். மெய், வாய், மூக்கு, கண், செவி என்னும் ஐம்பொறிகளோடு, பகுத்துணரும் ஆற்றல் வாய்ந்த மனம் என்னும் அரிய கருவியைப் பெற்று 'மக்கள் தாமே ஆறறிவுயிரே' எனப் பழந்தமிழ் இலக்கியமான தொல்காப்பியம் மக்கட் பிறப்பின் சிறப்பினைக் கூறுகின்றது உயிர் ஏணிப்படி வரிசையில் உயர்ந்து நிற்பது. மக்கட் பிறப்பேயாகும். பிறவிப் பயனாகிய வீடு பேறடையும் முயற்சிக்கு ஏனைய பிறப்புக்களிலும் மக்கட் பிறப்பே சிறந்ததாதலின் 'அரிது அரிது மானிடராதல் அரிது' என்று போற்றினர். ஆன்மப் பயன் கொள்ளுவதற்கு மானிடப் பிறவி பெரிதும் வாய்ப்பாக அமைந்துள்ளமையால் "வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்'' என்று அப்பரடிகள் அறிவுறுத்திக் காட்டியுள்ளார்.

உலகியலறிவும் இம்மை இன்பம் பெறுவதற்கு ஏதுவாக உள்ளன மெய், வாய், கண்' மூக்குச் செவி எனும் ஐம்பொறிகளுமாகும். இவற்றால் எய்தும் அறிவும் இன்பமும் சிற்றின்பமாக அமைகின்றன. பேரறிவும், பேரின்பமும் வடிவாவிலங்கும் இறையருள் பெறுவதற்கு -வீடு பேறெய்துவதற்கு இவை போதாதனவாக உள்ளன; தடையாகவும் அமைகின்றன. இவ்வைம்பொறிகளும் சாதாரண மக்கள் பால் இன்பம் தருவனவாக அமைந்து, அவர்களை மயக்கி அறியாமையின் பாற்படுத்தி. அவர்களை அவர்களைப் பிறவிப்பயன் எய்தாதவாறு தடுத்து அவர்கள் மேலும் மேலும் பிறவிப் பெருங்கடலிற்பட்டு ஆழுமாறு செய்து விடுகின்றன. இன்ப வாயில்களான இப்பொறிகளே ஆன்மாக்களை வஞ்சிக்கும் துன்ப வாயில்களாகின்றன. உயிர்கள் இக்கொடுமை உணர்ந்து. இவற்றால் கேடுறாது பேரின்பம் பெற வேண்டும் என்று கருதிய அருட் சான்றோர்கள்-சமய குரவர்கள் இப்புலன்கள் புரியும் கொடுமையை விரிவாக எடுத்துக் காட்டியுள்ளனர். இவ்வைம்புல உணர்வுகள் இன்பம் தருவன போலத் துன்பஞ் செய்தலின் அவற்றை "ஐம்புல வேடர்" என்று வஞ்சக வேடர்களாக உருவகம் செய்து காட்டியுள்ளனர். மனிதகுலம் ஐம்புல நுகர்வால்படும் அல்லல்களை உணர்த்த விரும்பிய மணிவாசகப் பெருமானர், அத்துன்பங்களைத் தாம் உழப்பனவாகத் தம்மீது ஏறட்டுக் கொண்டு 'நீத்தல் விண்ணப்பம்' என்னும் பகுதியில் பல வாறுகக் காட்டியுள்ளமை பயில்வோர் உள்ளத்தை உருக்குகின்றது. ''ஆனை வெம்போரிற் குறுந்தூறெனப் புலனால் அலைப்புண்டேனை'', ''எலும்பிடை நாங்கூழனப் புலனால் அரிப்புண்டு அலந்த வெறுந்தமியேன்". "மத்துறு தண் தயிரிற் புலன் தீக்கதுவக் கலங்கி வித்துறுவேன்" முதலிய அடிகள் திருவாக்காகும்.

துன்புறுத்த வல்ல பற்களுக்கு இடையிலிருந்தே நாக்கு அவற்றின் உதவியால் சுவைப்பயன் அடைகின்றது. ''பகை சேரும் எண்ணான்கு பற்கொண்டே நன்னு வகைசேர் சுவையருந்தும்'' என்பது ஆன்றோர் வாக்கு. அவ்வாறே துன்புறுத்தும் புலன்களையே துணையாகக் கொண்டு இன்பம்-பேரின்பம் எய்துவதென்பது அரியதோர் ஆன்ம சாதனையாகும். பக்தி நெறி வகுத்துக் காட்டிய அருட் சான்றோர்களாகிய ஆழ்வார்களும் நாயன்மார்களும் வீடு பேற்றிற்கு ஐம்புல வெற்றியினையே அடிப்படை நிலையாகக் கூறியுள்ளார். 'ஐம்புல அடக்கம்' இம்மை மறுமை வாழ்வுகளுக்கு முதற்படியாகப் பெருந்துணை புரிய வல்லதாகும். இதனைப் 'பொறிவாயில் ஐந்தவித்தல்' எனத் திருவள்ளுவர் கூறுகின்றார். புலனடங்கா நிலையில் சீவகரணங்களாய்த் துன்பம் விளைவிக்கும் மெய், வாய் முதலிய பொறிகள் அனைத்தும் அவை அடங்கிய நிலையில் சிவகரணங்களாக மாறி இன்பம் விளைவிக்கும் சாதனங்களாகின்றன. அந்நிலையில் அவற்றால்

எய்தலாகும் இன்பங்கள் சிற்றின்பத் தன்மைய வாயினும் பேரின்பம் பயக்கும் பாங்கு செய்து கின்றன. இதனால் அகப்பொருள் இலக்கணம் வகுத்து தமிழ்ச்சான்ருேர் களவென்பதனை விளக்குமிடத்து, அது பேரின்ப வாயிலா மாற்றையும் உணர்த்தியுள்ளனர். இந்த உண்மையினைப்

“ பெற்ற சிற்றின்பமே பேரின்ப மாமங்கே
முற்ற வரும் பரி சுந்தீ பற
முளையாது மாயையென் றுந்தீபற”

எனத் திருவுந்தியார் சாத்திரப்படுத்திக் காட்டு கின்றது.

அடங்கிய நிலையில் ஐம்புலன்களும் பால்தரும் பசுக்கள் போலப் பயன்பட்டும், அடங்கா நிலையில் அவை வெறித்துத் துன்புறுத்தியும் நிற்குமாற்றைத் திருமூலர்,

“ பார்ப்பான் அகத்தில் பாற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும்
அடங்கினல்
பார்ப்பான் பசுஐந்தும் பாலாச்
சொரியுமே”

என்ற அழகிய திருமந்திரமாக்கிக் காட்டி யுள்ளார்.

தெய்வம் போற்றும் சைவம் வைணவம் முதலிய சமயங்கள் புலனடக்கத்தை–ஐம்புல வெற்றியினை மிகவும் வற்புறுத்துகின்றன. தெய்வத்தை உடன்படாத புத்தம் சமணம் முதலான சமயங்களும் வாழ்வுப் பயனாகும் இன்ப நிலையடைவதற்குப் புலனடக்கத்தினை வலியுறுத்துகின்றன. புலனடங்கி அவற்றை வெற்றி கொண்ட நிலையில் புத்த சமய குரவர் “மாரனை வெல்லும் வீரன்” எனப் போற்றப் படுகின்ருர். அவ்வாறே சமண சமயத் தலைவர் புலன்களை வென்ற பெருமை தோன்ற ‘மகாவீரர்’ என மதிக்கப்படுகின்ருர், ஐம்புலன் களின் வழிச்செல்லாது மனத்தை அடக்குவது செயற்கருஞ் செயலாகும். அவ்வருமையை, “சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறமரிது, சத்தாகி சித்தமிசை குடி கொண்ட அறிவான தெய்வமே” என்னும் தாயுமான அடிகளின் வாக்கால் உணரலாம்.

வீடு பேற்றிற்கு வாயிலாகும் ஐம்புல வெற்றியை அடைந்த போது மனிதப்பிறவி பயனுடையதாகின்றது என்று அருட்சான்ருேர் கள் மகிழ்ந்தனர். தாங்கள் புலனடங்கித் திருவருள் வழி நிற்கும் திருவுடையராயினும் உலகமக்கள் புலனடக்கம் பெருது, அறியாமை யுற்றுப் பிறவிப் பௌவத்தில் உழலும் தன்மைக்குப் பெரிதும் இரங்குவாராயினர். உலக மக்களின் புலனடங்கா நிலைமையினைத் தம் மேலேற்றி அதனால் தாங்கள் துன்புறு வதாகப் பல பாடல்கள் பாடியுள்ளனர். அவ்வகையில் அப்பரடிகள் வருந்தி ஏங்கு வதாகப் பாடிய பாடல்களில் ஒன்று வருமாறு:-

“ வென்றிலேன் புலன்களைந்தும்
வென்றவர் வளா கம்தன்னுள்
சென்றிலேன் ஆத லாலே செந்நெறி
அதற்குஞ் சேயேன்
நின்றுளே துளும்புகின்றேன் நீசனேன்
ஈசனேயோ
இன்றுளேன் நாளையில்லேன் என்செய்
வான்தோன்றினேனே.”

ஐம்புலன்களையும் வென்று இரு வினையகற்றி, அவற்றின் பயனாவன ‘முள்வாய தொழிற் பஞ்சேந்திரிய வஞ்ச முகரிகாள்’ எனப் புலன்களை விளித்து அவற்றின் கொடுமை காட்டிக் கடிந்து பாடிய அப்பரடிகள் ‘வென்றி லேன் புலன்கள் ஐந்தும்’ என்று பாடுவது உலக மக்கள் ஐம்புலன்களுக்கு அடிமைப்பட்டு அல்லற்பட்டுப் பிறவிப் பயன் இழக்கும் கொடுமை நினைந்து அவர்கள் உய்யும் வழியடை யும் உபாயம் பெறுவதற்கே யாகும். அப்பரடி களும் அவரனைய அருட்சான்ருேர்களும் மனித குலத்தை வாழ்விக்க வந்தவர்களாதலின், அவர்கள் பாடியருளிய இத்தகைய தன்னிரக்கப் பாடல்கள் எல்லாம் மனித குல மேம்பாட்டிற்கு உறுதுணையாய் அமைவனவாகும்.

நாம் ஐம்புலன்கள் வழிச் செல்லாது தடுத்து, அப்புலன்கள் நமக்கு ஆட்படுமாறு செய்தல் வேண்டும். தான் புலன்களுக்கு அடிமைப்படுங்கால் அறியாமையும் மயக்கமும் எய்திப் பிறவி, துன்ப ஏதுவாகின்றது. தனக்குப் புலன்கள் அடிமைப்படுங்கால் தெளிவும் மெய் யுணர்வும் தோன்றப் பிறவி என்ப ஏதுவா

கின்றனது. ஐம்புலன்களையும் வெற்றி கொள்ளாத நிலையில் தம் பிறவி பயனற்றதாகின்றதே என்று ஏக்கத்தால் 'வென்றிலேன் புலன்கள் ஐந்தும்' என்று அப்பரடிகள் இறங்குகின்றார்.

தான் புலன்களை வெல்லாவிட்டாலும். அவற்றை வென்றவர்களுடைய சூழலில் உடனிருப்பது இனியாவது வெல்லுதற்கு உரிய உபாயமாகும். புலன் வென்ற பெருமக்கள் கூட்டத்தில் இருப்பதால், ஐம்புல வெற்றிக்கு வாய்ப்பு ஏற்படுவதோடு, அவர்கள் எய்தும் பயனை அடைவதற்காம் சூழ்நிலையும் உருவாதல் கூடும். இதனை மணிவாசகர் "ஊராமிலைக்கக் குருட்டாமிலைத்தாங்கு" என்னும் அழகிய உவமையால் சுட்டி,மெய்யன்புடையார் அனைவரும் பேராவுலகம்புக்கார் அத்தகைய அன்பிலாத யானும் அவ்வாறு புகுவதற்கு ஆசைப்பட்டு அழுகிறேன் என்னும் கருத்தினைப் புலப்படுத்தியுள்ளார். அதனால் புலன்களை வென்றவர்களின் இடத்தில் சென்றடையாத புன்மை நினைந்து' வென்றவர் வளாகம் தன்னுள் சென்றிலேன்' என்று அப்பர் ஏங்குகின்றார். வளாகம் என்பது இடத்தினை-சூழலைக் குறிக்கும்.

ஐம்புலவெற்றியும், வென்றவர் இணக்கமும் இல்லாமையால் பிறவாப் பெரு நெறியினை-பேரின்ப நெறியினை இழந்துவிட்ட தன்மையை உணர்ந்த அடிகள் 'ஆதலாலே' செந்நெறி அதற்கும் சேயேன்' என்று வருந்துகின்றார். செந்நெறி யாவரும் செல்லக் கிடந்தும் தாம் அதன் கண் செல்லாமையால் தமக்கு அது சேயதாய்-தொலைவினதாய் அமையும் தன்மை செந்நெறி அதற்கும் சேயேன்' என்பதனால் உணர்த்துகின்றார். ஐம்புல வெற்றியினை அடிப்படையாகக் கொண்டு விளங்கும் பேரின்பநெறியாகிய சிவநெறி இங்குச் செந்நெறி (செம்மை+நெறி) எனப்படுகின்றது.

ஐம்புல வெற்றியும், வென்றார் இணக்கமும் இல்லாமை ஆகிய காரணங்களால், செந்நெறிக்குச் சேயனாகும் காரியம் எய்திப் பிறவிப் பயன் இழந்ததனால் நீசனாக-இழி பிறப்புடையவனாக நிற்கும் நிலைமைக்கு நொந்து அடிகள் அடையும் மனவேதனை, "நின்று உளே துளும்புகின்றேன் நீசனேன் ஈசனேயோ'' என்பதில் புலனாகின்றது.

உடல்வாழ்வு நிலையற்றது. வாழும் கால அளவு முன் அறியப்படாதது. 'நேற்றிருந்தோர் இன்றில்லை' என்று மக்கள் கூறுமாறு யாக்கை நிலையாமையை கொண்டது இவ்வுலகம். அதுதான் இவ்வுலகின் பெருமையாம் என்பதனைத் திருவள்ளுவர் 'நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும் பெருமை உடைத்து இவ்வுலகு' எனக் காட்டுவர். இன்றிருந்து நாளை அழிந்துபடும் நிலையில்லா உடல் வாழ்வினைக் கொண்ட தாம் இறந்துபடு முன்னர்ப் பிறவிப் பயனை அடைவதற்குரிய செயல்களில் ஈடுபட்டுப் பயன் பெறாமல், அரிதிற் பெற்ற பிறவியை வீணாக்கிவிட்டமையால், எதற்காக இவ்வுலகத்திற் பிறந்தேன்' என்று ஏங்குகின்றார். அவ்வேக்கம்' இன்றுளேன் நாளை இல்லேன் என் செய்வேன் தோன்றினேனே' என்ற அடிகள் திருவாக்கில் எதிரொலிக்கின்றது.

புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே' எனப் புகன்று நண்ணரிய சிவானந்த ஞானவடிவாகிய அடிகள், 'என்செய்வான் தோன்றினேனே' என்று ஏங்கும் ஏக்கம், புலனோடாடித் திரியும் மனித குலத்தின் ஈடேற்றத்திற்காக ஏங்கும் ஏக்கமாக அமைந்துள்ளது. அத்தொடர் அப்பதிகப்-பாடல்கள் அனைத்திலும் ஈற்றுத் தொடராகத்திகழ்கின்றது.

வென்றிலேன் புலன்களைந்தும்' எனத் 'தொடங்கும் திருநேரிசைப் பதிகம் பத்துப் பாடல்களைக் கொண்டு நிறைவு பெற்றுள்ள போதிலும், மனித குல நலம் நினைந்து இறைவனை நோக்கிக் குறையிரந்த பதிகமாக அமைதலால் 'குறையிரந்த திருநேரிசை' என வழங்கப்படுகிறது. மீண்டும் அத்திருப்பாடலைக் காண்போம்:-

'வென்றிலேன் புலன்களைந்தும்
    வென்றவர் வளாகம் தன்னுள்
சென்றிலேன் ஆதலாலே
    செந்நெறி அதற்கும் சேயேன்
நின்றுளே துளும்பு கின்றேன்
    நீசனேன் ஈசனேயோ
இன்றுளேன் நாளை யில்லேன்
    என்செய்வான் தோன்றினேனே

உ

# "சூடிக் கொடுத்த சுடர்க்கொடி"

புலவர் த. கோடப்பிள்ளை, பி.ஏ.,
தமிழாசிரியர்

## காட்சி 1

இடம் : பூந்தோட்டம்
நேரம் : காலைப்போது
உறுப்பினர் : நம்பி, ரெங்கன், பெரியாழ்வார், கைக்குழந்தை.

நம்பி : திருதான் பெரியது!

ரெங்கன் : மண்ணுதான் பெரியது!

நம்பி : திருதான் பெரிது! இந்தத் திருவில்லிப்புத்தூர் வடபெருங் கோயிலுடையான் சாட்சியாகச் சொல்றேன் திருதான் பெரிது.

ரெங்கன் : இல்லே, நானும் அந்த வடபெருங் கோயிலுடையான் சாட்சியா அடித்து சொல்றேன். மண்ணுதான் பெரியது!

நம்பி : இல்லே திருதான் பெரியது.

ரெங்கன் : மண்ணுதான்!

நம்பி : திருதான்! சொல்லிப்பாரு, திருமண், திருமண். பார் திருதான் முன்னது. பெரியது.

ரெங்கன் : மண்ணுதான்; நீயே சொல்லிப்பாரு, திருமண். மண்ணுக்குத் தான் திரு சேர்ந்திருக்கிறது. அதனுலே மண்ணுதான் பெரியது.

நம்பி : திருதான்! ஏன்னு, திருசேர்லேன்னு மண்ணுக்கு மதிப்பில்லே, அதனுலே திருதான் முன்னது. பெரியது.

ரெங்கன் : மண் இடலேன்னு திருவுக்கு மதிப்பில்லே, மண்சேரலேன்னு திரு, வெறும் திருதான். அதனுலே மண்ணுதான் முன்னது; பெரிது.

நம்பி : சரி, பொறு ரெங்கா! நாம் ஏன் இப்படி அடிச்சுக்கணும்? நம் ஆசாரியார் இருக்கிருரே விட்டுணுசித்தர்...

ரெங்கன் : ஆமா, பட்டர்பிரான்.

நம்பி : நாம் அவருர்க்குச் சீடராக இருந்து என்ன பயன்?

ரெங்கன் : ஆமாம், நம் சந்தேகத்தை அவரிடம் கேட்காமே நாம் அவருடைய சீடராக இருந்து என்ன பயன்?

நம்பி : வா, அவரிடம் கேட்போம் திருதான் பெரிசு.

ரெங்கன் : வா, அவரையே கேட்போம். மண்ணுதான் பெரிசு.

நம்பி : திருதான் பெரிசு!

ரெங்கன் : மண்தான் பெரிசு.

நம்பி : திருதான்!

ரெங்கன் : மண்தான்!

நம்பி : திருதான் பெரியது!

ரெங்கன் : மண்தான் பெரிது!

நம்பி : இல்லே திருதான்!

ரெங்கன் : இல்லை மண் தான் பெரியது!

பெரியாழ்வார் : ரெங்கா, நம்பி என் இது ?

ரெங்கன் : சுவாமி!

நம்பி : குருவே! நான் திருதான் முன்னது, பெரியது என்கிறேன்.

ரெங்கன் : மண் தான் பெரியது என்கிறேன் நான்.

நம்பி : இவற்றில் எது பெரியது? தாங்களே சொல்லுங்கள் குருவே.

பெரியாழ்வார்: சீடர்களே ! இதற்கா இல்வளவு போட்டி? நம்பி நீ சொல் திருதான் பெரியது என்பதற்குக் காரணம்?

நம்பி : திரு என்றால் தெய்வம்.

பெரியாழ்வார் : சரி ரெங்கா, மண் தான் பெரியது என்பதற்குக் காரணம்?

ரெங்கன் : மண்ணைத்தான் திருமாலை நினைப்பதற்கு அடையாளமாகக் கொள்கிறோம். மண்தான் உயிர், அதனால் மண்தான் பெரியது. அதற்காகத்தான் திரு சேர்க்கப்படுகிறது.

நம்பி : இல்லை, திருவுக்கு அடையாளமாக மண் நிற்கிறது. எதற்கு அடையாளமாக? திருவுக்கு அடையாளமாக. அதனாலே திருதான் பெரியது.

ரெங்கன் : இல்லை, மண் தான் பெரியது.

நம்பி : திருதான் பெரியது.

பெரியாழ்வார் : நிறுத்துங்கள் !

நம்பி ரெங்கன்: சுவாமி ! (வாயைப் பொத்திக் கொள்கிறார்கள்)

பெரியாழ்வார் : இப்படி திருவையும், மண்ணையும் பிரித்து தொலைவிலே வைத்துக் கொண்டு சண்டையிடுகிறீர்களே ! நீ திரு என்றால் தெய்வம் என்றாய். நீ மண் என்றால் உயிர் என்றாய். ஏன் தனித்தனியாக பார்க்கிறீர்கள். தெய்வத்தோடு ஒன்றாக இணைய வேண்டும். திருவையும் மண்ணையும் ஒன்றாகக் காணுங்கள். தெய்வத்தை விட்டு உயிர் பிரிக்கப்படும் போது தான் உயிர்க்கு வாதனை மிகுகிறது. உயிர் துயர் நீங்கி திருவை-திருமாலை-அடைந்துவிட்டால் வைகுந்தமே கிடைக்கிறது. திருமண்-திருமண் என்றால் தெய்வத்தோடு உயிர் ஒன்றிவிடுகிறது என்பது பொருள். அதனால் திரு, மண் இரண்டையும் ஒன்றாகவே காணுங்கள்.

நம்பி : சுவாமி ! எங்களை மன்னித்து விடுங்கள்.

ரெங்கன் : ஆமாம் குருவே ! தெரியாமல் சண்டையிட்டுக் கொண்டோம்.

நம்பி ; இனிமே சண்டையிட மாட்டோம்.

ரெங்கன் : திருமண் !

நம்பி : திருமண் !

ரெங்கன் : திருமண் இட்டாலே, திருமாலை நினைப்போம். திருமாலின் பெருமையை என்னென்பது?

பெரியாழ்வார் : ஆமாம் திருமாலை நினைப்போம். திருமாலின் பெருமையை என்னென்பது? ஆகா...பெருமாளே ! கண்ணா ! கடல்வண்ணா ! என்மீது இரங்கும் தயை இதுவோ? ஏதுமறியா என்னை மதுரைப் பாண்டியன் வல்லபன் அவையிலே, வாதிலே வெல்ல வைத்தாய்! எல்லாம் வல்ல எம்பெருமானே ! உலகளந்த உத்தமனே ! திருமாலே ! உன்பேர் பாடிப் போற்ற என்னைப் பணித்த ஏந்தலே! கன்னிக்குக் காட்சியளித்த கடவுளே ! பட்டர்மகனாய் விளங்கிய என்னைப் பட்டர்பிரான் என எல்லோரும் அழைக்க எனக்கு ஏற்றமளித்தாய். பூவாலே ஒரு மாலை சாத்திய என்னைப் பாமாலையும் சாத்தும்படிப் பணித்த திருமாலே ! செங்கனிவாய் திறந்து பட்டர்பிரான் எனவழைத்த, அரவணைப் பெருமாளே ! வாழிய பல்லாண்டு.

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பல்கோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா—உன்
செவ்வடி செவ்வித் திருகாப்பு.

அடியோ மோடும்நின் னேடும் பிரிவின்றி ஆயிரம்–பல்லாண்டு
வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு
படைபோல் புக்கு முழங்குமப் பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே
உன் பெருமையே பெருமை ! என்னையும் உன்
அடியானுய் ஏற்ற பெருமாளே !

நம்பி : சுவாமி !

ரெங்கன் : ஆகா ..எவ்வளவு உணர்ச்சி மயமாய் மாயக்கண்ணனுக்குப் பல்லாண்டு பாடியிருக்கிறீர்கள் !

நம்பி : தன் குழந்தையைத் தாய் 'பிறர் கண்படாமல் வாழ்க' என வாழ்த்துவதுபோல் தாங்களும் தாயுள்ளம் கொண்டு திருமாலை வாழ்த்தியுள்ளீர்கள்.

பெரியாழ்வார்: ஆம் சீடர்களே ! வாதிலே வெல்லும் வல்லவை அளித்துப் பாண்டியன் பொற்கிளியையும் அளித்த அந்தத் திருமால், என் முன்னும் காட்சி தந்தருளினுன். அக்காட்சி கண்கொள்ளாக் காட்சியாய் விளங்கியது. திருமகளோடு தோற்றமளித்த திருமாலுக்கு என்ன ஊறு விளைந்து விடுமோ என்று அஞ்சிய அடியேன் உடனே இப்பல்லாண்டு பாடினேன். ஆகா ..... மீண்டும் அடியேன் பாட என் உள்ளமெல்லாம் எவ்வளவு குதூகலிக்கிறது தெரியுமா? ஆ......திருமாலின் பெருமையில் உங்களை மறந்தேன். வாருங்கள் சீடர்களே ! கார்மேக வண்ணனுக்குப் பூமாலை தரும் பூந்தோட்டம் கொத்தி நீர் பாய்ச்சுவோம். பாண்டியன் பொற்கிளிச் செல்வமெல்லாம் இப்பூந்தோட்டமாய் வளரக் காண்கிறேன். என் கண்ணன், மணிவண்ணன் அவனுக்கு பூக்களையும் துளபத்தையும் அளித்தருளும் இத்தோட்டம் வாழ்க. வாருங்கள், மண்வெட்டி எடுங்கள்.

ரெங்கன் : இதோ, இந்தாருங்கள் !

பெரியாழ்வார்: கொடு...பானையில் தண்ணீர் கொண்டு வாருங்கள்.

நம்பி : அப்படியே.........

[குழந்தை அழுகுரல்]

பெரியாழ்வார்: ஆ...குழந்தை...குரல்...ரெங்கா !

ரெங்கன் : சுவாமி !

பெரியாழ்வார்; குழந்தை அழுகுரல் கேட்கிறதே.

ரெங்கன் : ஆமா...நம் தோட்டத்திலே குழந்தை அழுகுரல் ! என்ன என்ன புதுமை?

பெரியாழ்வார்: பார்......பார்......பாதம்......அழுகிறது... (குழந்தையைக் கண்டு) ஆ...பச்சிளங் குழந்தை? ரெங்கா !...ரெங்கா ! அழகுருவாய் அமைந்த பெண்குழந்தை ?

ரெங்கன் : யார் குழந்தையோ?

நம்பி : என்ன, என்ன...குருவே ! ஆ...குழந்தை !

பெரியாழ்வார்: ஆ...யார் குழந்தை? இங்கு யாரும் வரவில்லையே நீ யாரையும் பார்த்தாயா ரெங்கா?

ரெங்கன் : இங்கே யாரும் வரவில்லை குருவே. இங்கே நாம்தானே இருக்கிறோம். ஏதோ மாயமாய் வந்திருக்கிறது.

பெரியாழ்வார்: ஆ...ஆமாம்...மாயம்...மாயம்...மாயக்கண்ணன் நமக்களித்த மலர்க்குழந்தை. துளசிச் செடியருகே தூவெண் மலர்க்குழந்தை. மால்வண்ணு ! நீ அளித்த அருங்குழந்தை......வளர்க்கிறேன்......வளர்க்கிறேன். வாருங்கள் சீடரே! வாருங்கள் !

(தொடரும்)

# வேல் வேல்!

திரு. டி. ஆர். சுப்பிரமணியம், அறங்காவலர்
அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோவில்,
திருச்செந்தூர்.

அசுரரின் கொடுமை தாங்காது அல்லற்பட்ட அமரர்கள், சிவபெருமான் திருமுன் வந்து தாங்கள்படும் துன்பங்களைக் கூறிப் பல வாருகக் கதறியழுது புலம்ப ,பக்தரின் துயரை உடன் நீக்கியருளும் நஞ்சுண்ட கண்டனுகிய சிவனும் தனது செல்வக்குமரன் அருள் கடல் கந்தவேளை அமரருக்கு ஆதரவாய் அமர் புரியப் பணித்து, வேலாயுதத்தைப் படைக்க, அன்னை சக்தியும் அதை வாங்கி ஆசி கூறிக் குமரன் திருக்கரங்களில் கொடுத்தார். அந்த வேல் எதையும் வெல்லும் வல்லமை பெற்றதாகவும் ஞான ரூபமாகவும் விளங்கியது.

சிவனது சூலமும், திருமாலின் சக்கரமும், இந்திரனுடைய குலிசமும் சூரனை வெல்லும் வலிமையற்றது என்றும்; முருகன் செம்பொற் திருக்கை வேலே சூரனை அழிக்க வல்லது என்றும் உணர்ந்த தேவர்களாலும்,சதுர்முகனு கிய பிரமனுலும் வேண்டப்பட்டதன் காரண மாகப் பிரயோகிக்கப்பட்ட முருகனது கைவேல் சூரனுடைய உடலை அவனது எழுகிரிகளுடனும் ஒரே நொடியில் ஊடுருவிப் பாய்ந்தது என்று அருணகிரியார் பாடியதை அறிந்து உணர்ந் தவர்கள் 'வேலும் மயிலும் துணை' 'வேலை வணங் குவதைத் தவிர வேறு என்ன வேலை' 'வேல், வந்து வினை தீர்க்கும்' என்றெல்லாம் வேலை எண்ணித் தியானித்துத் துதி செய்கிருர்கள்.

மாமரமாய் நின்ற சூரனைக் கொன்று எழுகிரி களையும் ஊடுருவிச் சென்று வலிமை மிக்க அசுரர்களின் மார்பைத் துளைத்துத் தாமரையை வீடாகக் கொண்ட பிரமனைச் சிறையிலிட்டு தேவேந்திரனைச் சிறையினின்றும் மீட்ட வேலா னது பூர்ணமாயுள்ள சூரியன், ஒரு கோடி சந்திரன் இவற்றின் ஒளி ஒருங்கு சேரப் பெற்று ஒளி வீசுவது; பொன்மலையாம் மேரு மலையைக் கடைந்தது போன்ற ஒளியைக் கொண்டது!

அறிவு, ஆழம்,அகலம், கூர்மை என்ற மூன்று இலக்கணங்களை உடையது. வேலின் அடிப் பகுதி ஆழம், இடைப்பகுதி அகலம். நுனிப் பகுதி கூர்மை. ஆகவே வேல் ஞான சக்தி.

வேலுக்கு வழங்கப்பட்டிருக்கும் பெயர்கள் நாம் எத்தனை எத்தனை! வடிவேல்' தனிவேல், அயில்வேல், நெடுவேல், கதிர்வேல், விக்கிரம வேல், சுடர்வேல், மணிவேல், வைவேல்,ஞான வேல், வீரவேல், வெற்றிவேல், சக்திவேல், போர்வேல், செவ்வேல், தாரைவேல், அழகு வேல், பெருவேல், கொற்றவேல், சதுர்வேல், புனிதவேல், முனைவேல், நல்வேல், இனிய வேல், திருவேல், திறல்வேல், அடல்வேல், மிளிர்வேல், அருள்வேல், பருவேல், வல்வேல், ரணவேல், தங்கவேல், கனகவேல், இகல்வேல், என்றதெல்லாம் வேலுக்கு எத்தனையோ பெயர்களைப் புராண இலக்கியங்கள் சுமந்து கொண்டிருக்கின்றன.

நாஉடைய தீரன்தன் பாடல் பெற்றுள்ளது வேல். திருமுருகாற்றுப்படை, பரங்கிரிப் பகுதியில்,

"இருபேர் உருவில் ஒரு பேரியாக்கை
அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி
அவுணர் நல்வலம் அடங்கக் கவிழ் இணர்
மாமுதல் தடிந்த மறுஇல் கொற்றத்து
எய்யா நல் இசைச் செவ்வேல்.''

சூரன் இரு பெரிய உருவங்களைக் கொண்ட ஒருயாக்கையை உடையவன். அவன் கொல்லப் பட்டு இரு கூருகும்படி, சூர்குலம் அத்தனை காலமும் அடைந்திருந்த வெற்றி மாளும்படி, மாமரமாய் நின்ற சூரனை அழித்த அளவிலடங் காப் புகழுடைய செம்மையான வேல் என்கிருர் நக்கீரர். வேல் செய்த விந்தை இது மட்டுமா? முருக பக்தர் சிகண்டிமுனிவர் கதிர்காமம் சென்ற விடத்தில் மதயானை எதிர்ப் பட அருகில் இருந்த வெற்றிலையைக் கிள்ளி யெறிய அது வேலாகி யானையை மாய்த்தது! கற்கிமுகி என்னும் பூதத்தின் குகையிலிருந்து நக்கீரர், விடுபட்டது முருகன் கைவேலால்! ஒய்மா நாட்டு நல்லியக் கோடன் வேலூர்க் கோட்டையிலுள்ள கேணியிலிருந்த மலர்களைப் பறித்து முருகனைத் தியானித்துப் பகைவரை நோக்கி வீச, பறித்து எறியப்பட்ட மலர் களனைத்தும், முருகனின் கருணை காரணமாக வேல்களாகமாறிப் பகைவரை அழித்து அவனைக் காப்பாற்றியது.

அந்த வேல்-நம்மையும் காப்பற்றட்டும்!

"வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்-வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
தொளைத்தவேல் உண்டே துணை."

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# நம்பியாண்டார் நம்பி-கலித்துறைத் திருவந்தாதி

(குன்றக்குடி ஸ்ரீ ஆறுமுகத்தம்பிரான் பதவுரையுடன்)
பிரதி செய்தவர் : சேக்கிழார்தாசன்

### திருஞானசம்பந்த சுவாமிகள்

வைய மகிழயாம் வாழ
அமணர் வலிதொலைய
வையன் பிரம புரத்தாற்
கம்மென குதலைச்செவ்வாய்
பைய மிழற்றும் பருவத்துப்
பாடப் பருப்பதத்தின்
றைய லருள்பெற் றனனென்பர்
ஞானசம் பந்தனையே. (33)

(இ-ள்) ஆளுடைய பிள்ளையாரை; உலகத்தார் மகிழ்ச்சியடையவும் யாமெல்லாம் வாழவும்; சமணர்களுடைய கொள்கை வலி கெடவும்; எமது முதல்வராகிய பிரமபுரத்தில் வீற்றிருந் தருளும் தோணியப்பருக்கு; அழகிய மிருது வான மழலை வார்த்தையை; சிவந்த திருவா யினால் மெல்லப் பேசும் மூன்று வயதில் பாடும் படிக்கு; உமாதேவி யாரது திருவருளைப் பெற்றாரென்று சொல்வர். (எ-று) ஏ-அசை

பந்தார் விரலியர் வேள்செங்கட்
சோழன் முருகனல்ல
சந்தா ரகலத்து நீலநக்
கன்பெயர் தான்மொழிந்து
கொந்தார் சடையர் பதிகத்தி
லிட்டடி யேன்கொடுத்த
வந்தாதி கொண்ட பிரானருட்
காழியர் கொற்றவனே. (34)

(இ-ள்) மங்கையர்க்கரசியார் குலச்சிறை நாயனார் கோச்செங்கட்சோழர்; முருக நாயனார் நல்ல சந்தனக்குழம் பணிந்த மார் பையுடைய திருநீலநக்கநாயனார் என்னும் இவர்கள் திருப்பெயரைப் புகழ்ந்து; கூட்ட மான சடையையுடைய சிவபிரானது திருப் பதிகத்திலோதி; அடியேன் சாத்திய அந்தாதி என்னும் பாமாலையைச் சூடிக் கொண்டருளிய முதல்வர் யாரெனில்; அருளையடைந்த ஆளு டைய பிள்ளையார் (எ-று) தான் ஏ-அசை.

### ஏயர்கோன் கலிக்காம நாயனார்

கொற்றத் திறலெந்தை தந்தை தன்
றந்தையெங் கூட்ட மெல்லாந்
தெற்றச் சடையாய் நினதடி
யேந்திகழ் வன்றொண்டனை
மற்றிப் பிணிதவிர்ப் பானென்
றுடைவா ளுருவியந்நோய்
செற்றுத் தவிர்கலிக் காமன்
குடியேயர் சீர்க்குடியே. (35)

(இ-ள்) வெற்றி மிக்க வலியினையுடைய என் பிதாவும் அவர் பிதாவும் ஆகிய; எமது மூன்று சுற்ற முதல் எல்லாரும், நெருங்கிய சடையை யுடையவரே உம்முடைய அடியேங்கள் அவ்வாறாக; விளங்கிய நம்பியாரூரனா இந் நோயை நீக்கவல்லவ னென்று; உடைவாளை உறையினின்றுங் கழித்துத் தன்னுயிர் நீக்கி அச்சூலைநோய் நீங்கிய கலிக்காம நாயனாரது குடியாதெனில் ஏயர் கோக்குடி (எ-று) மற்று, ஏ-அசை.

### திருமூல நாயனார்

குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல
மேய்ப் போன் குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன்
றன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி
யேபர விட்டெனுச்சி
யடிமன்ன வைத்த பிரான்மூல
னாகின்ற வங்கணனே. (36)

(இ-ள்) உயர்குடிகள் நிலை பெற்ற சாத்தனூ ரின்கணுள்ள பசுக்கூட்டங்களை மேய்க்கும் இடையனது உடலிற்புகுந்து; திருமுடியின் கண் வாழும் இளம்பிறையையுடைய நிறைந்த தமிழில் அமைந்த மறை மொழியால் துதித்து; என் சிரசின் கண் தன் திருவடி எந்நாளும் நிலைபெற வைத்தவர் யாரெனில்; திருமூல நாயனாரென்னும் பெருங்கருணையை யுடையவர். (எ-று) ஏ-அசை.

தண்டியடிகளுயனர்

கண்ணர் மணியொன்று மின்றிக்
கயிறு பிடித்தாற்குத்
தண்ணர் புனற்றடந் தொட்டலுந்
தன்னை நகுமமணர்
கண்ணங் கிழப்ப வமணர்
கலக்கங்கண் டம்மலர்க்கண்
விண்ண யகனிடைப் பெற்றவ
ஞரூர் விற்றண்டியே. (37)

(இ-ள்) கண்ணினுள்ள கருமணி ஒன்றேனு மில்லாமற் குளந் தொடுங்காற் கோலிற் கட்டிய கயிற்றைப் பிடித்துக் கொண்டு; சிவபிரானுக்குக் குளிர்ந்த நீரையுடைய வாவி யொன்றை எடுக்கவும்; அது கண்டு தன்னைக் குருடனென்றிகழும் சமணர்களை அவ்விடத் துக் கண்ணிழந்து போக; அவர்களைக்கலங்கச் செய்து; அந்த மலர் போலுங் கண்ணைச் சிவபிரானிடத்துப் பெற்றுக் கொண்டவர் யாரெனில்; திருவாரூரில் அவதரித்த பத்தி வலியையுடைய தண்டியடிகளுயூனர். (எ-று) ஏ-அசை.

மூர்க்க நாயனர்

தண்டலை சூழ்திரு வேற்காட்
டூர்மன்னன் றகுகவற்ருத்
கொண்டவல் லாயம்வன் சூதரை
வென்றுமுன் கொண்டபொருண்
முண்டநன் னீற்ற னடியவர்க்
கீபவன் மூர்க்கனென்பர்
நண்டலை நீரொண் குடந்தையின்
மேவுநற் சூதனையே. (38)

(இ-ள்) சோலை சூழ்ந்த திருவேற்காடு என்னும் ஊரில் அவதரித்த முதல்வரும்; தக்க சூதாடுதற்கு நியமித்த வல்லுப் பகை யுள்ள இடத்தில் வலிய சூதாடு மலர்களை வெற்றி கொண்டு தான் முன் கொண்ட பொருளைத் திரிபுண்டரமாக அணிந்த நல்ல நீற்றையுடைய சிவபிரான் அடியார்க்குக் கொடுக்கின்றவரும் ஆகிய; நண்டுகள் சஞ்சரிக்கின்ற நீர்வளம் பொருந்திய ஒள்ளிய குடந்தைக்கண் சென்றிருந்த நல்ல சூதாட் டில் வல்லவரை; மூர்க்க நாயனரென்று கூறுவர். (எ-று) ஏ-அசை

சோமாசி மாற நாயனர்

சூதப் பொழிலம்ப ரந்தணன்
சோமாசி மாறனென்பான்
வேதப் பொருளஞ் செழுத்தும்
விளம்பியல் லான்மொழியா
னீதிப் பரன்மன்னு நித்த
நியமன் பரவையென்னு
மாதுக்குக் காந்தன் வன்றெண்டன்
றனக்கு மகிழ்துணையே, (39)

(இ-ள்) தேமாம் பொழில் சூழ்ந்த திருவம்ப ரென்னுந் திருப்பதியில் அவதரித்த மறைய வராகிய; சோமாசி மாற நாயனரென்று சொல்லப்படுவோர்; வேதத்தின் பொரு ளாகிய திருவைந்தெழுத்தையும்; ஓதியன்றிப் பிறவார்த்தைகள் ஒன்றுஞ் சொல்லாதவரும்; ஒழுக்கத்திற் சிறந்தவரும் நிலை பேருக அன வரதமும் யாகம் முதலிய நியமங்களையுடைய வரும்; பரவையா ரென்னும் பெண்ணுக்குக் கணவராகிய நம்பியாரூரருக்கு மகிழ்தற்குரிய நண்பருமாயுள்ளவர் (எ-று) ஏ-அசை.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் துதி

துணையு மளவுமில் லாதவன்
றன்னரு ளேதுணையாக்
கணையுங் கதிர்நெடு வேலுங்
கறுத்த கயலிணையும்
பிணையு நிகர்த்தகட் சங்கிலி
பேரமைத் தோளிரண்டு
மணையு மவன்றிரு வாரூர
ஞகின்ற வற்புதனே. (40)

(இ-ள்) ஒப்பும் உயர்வுமில்லாத சிவபிரான் திருவளே துணையாக; அம்பும் ஒள்ளிய நீண்ட கதிர்வேலும் இணைக்கயலும் மானேக்கும் ஒத்த கண்ணையுடைய சங்கிலி நாச்சியாரது; பெரிய மூங்கில் போலும் தோளி ரண்டையும் அணைகின்றவர் யாரெனில்; நம்பி யாரூரரென்னும் திருப் பெயரையுடைய அற்புதர் (எ-று) ஏ-அசை.

சாக்கிய நாயனர்

தகடன வாடையன் சாக்கியன்
மாக்கற் றடவரையின்
மகனடந் தாக்கக் குழைந்ததிண்
டோளர் வண் கம்பர் செம்பொன்

நிகழ்தரு மேனியிற் செங்க
லெறிந்து சிவபுரத்துப்
புகழ்தரப் புக்கவ னூர்சங்க
மங்கை புவனியிலே. (41)

(இ-ள்) பெரிய கற்பாறைகளோடு கூடிய விசாலமான மலையரையன் புத்திரியாகிய உமா தேவியார் தனமானது தழுவக் குழைந்த திண்ணிய தோளையுடையவராகிய; வளவிய ஏகாம்பர நாதர் சிவந்த பொன் போல் ஒளிரும் திருமேனியிடத்துச் செங்கல் துண்டுகளை எறிந்து; சிவலோகத்தின்கண் யாவரும் புகழும்படி அடைந்தவரும்; இலை போல் மிருதுவான துவாரடையை யுடையவருமாகிய சாக்கிய நாயனுர் ஊர் யாதெனில்; நிலவுலகத்தின்கண்ணுள்ள சங்கமங்கையாம். (எ-று) ஏ-அசை.

### சிறப்புலி நாயனுர்

புவனியிற் பூதியுஞ் சாதன
மும்பொலி வார்ந்துவந்த
தவநிய மர்க்குச் சிறப்புச்செய்
தத்துவ காரணனு
மவனியிற் கீர்த்தித் தென்னுக்கூ
ரதிப னருமறையோன்
சிவனிய மந்தலை நின்றதொல்
சீர்நஞ் சிறப்புலியே. (42)

(இ-ள்) நிலவுலகின்கண் திருவெண்ணீறும் உருத்திராக்கம் முதலிய சிவவேடமும்; பொலிவடையப் பெற்றுத் தன்னிடத்து வந்த தவநியமங்களையுடைய சிவனடியார்களுக்கு; திருவமுது செய்வித்தல் முதலிய உபசாரங்களைச் செய்கின்ற மெய்யுணர்ச்சி உதித்தற்கிடமாயுள்ளவர் யாரெனில்; பூமியில் புகழ் விளங்கிய திருவாக்கூரின்கண் அவதரித்த முதல்வரும்; அரிய மறையவர் குலத்தினரும் ஆகிய சைவ நெறிக்கண் முற்பட்டுநின்ற; பழைய சிறப்பமைந்த நமதுசிறப்புலி நாயனுர் எ-று) ஏ-அசை.

### சிறுத்தொண்ட நாயனுர்

புலியி னதளுடைப் புண்ணியற்
கின்னமு தாத்தனதோ
ரொலியின் சதங்கைக் குதலைப்
புதல்வ னுடறுணித்துக்
கலியின் வலிகெடுத் தோங்கும்
புகழ்ச்சிறுத் தொண்டன் கண்டீர்
மலியும் பொழிலொண் செங்காட்டங்
குடியவர் மன்னவனே. (43)

(இ-ள்) நெருங்கிய சோலை சூழ்ந்த ஒள்ளிய திருச்செங்காட்டங் குடியிலுள்ளார்க்கு முதல்வரை; புலித்தோலை ஆடையாக வுடைய சிவபிரானுக்கு இனிய திருவமுதாகத் தன்னுடைய ஓரு ஒலியுள்ள சதங்கையணிந்த மழலைமொழிப் புதல்வனது உடலத்தை அரிந்து; அஞ்ஞானத்தின் வலியை யழித்து மிக்க புகழையுடைய சிறுத்தொண்ட நாயனுர் என்று அறிஞர்களே நீவிர் அறிந்து கொள்ளுங்கள். (எ-று) ஏ-அசை.

### சேரமான் பெருமாணுயனுர்

மன்னர் பிரா னெதிர் வண்ணு
னுடலுவ ரூறிய நீறர்
தன்னர் பிரான்றமர் போல
வருதலுந் தான் வணங்க
வென்ன பிரானடி வண்ணு
னெனவடிச் சேரனென்னுந்
தென்னர் பிரான்கழ றிற்றறி
வானெனுஞ் சேரலனே. (44)

(இ-ள்) அரசர்க்குப் பிரானுகிய தன்னெதிரில் வண்ணுனவன் தன்னுடம்பின்கண் உவர்மண் நனைந்து ஊறிய நீற்றினுல் அவ்வெண்ணீறணிந்த சிவபிரான் அடியார் போல் வரவும்; தான் எதிர் சென்று வணங்குங்கால்; பிரானே இது என்ன அடியேன் வண்ணுன் என்று அவன் கூற; அடிமை சேரன் என்று சொல்லும்; பாண்டியர்க்கு முதல்வராயுள்ளவர் யாரெனில்; கழறிற்றறிவார் நாயனுர் என்னும்சேரவமிசத்தரசர். (எ-று) ஏ-அசை.

சேரற்குத் தென்னு வலர்பெரு
மாற்குச் சிவனளித்த
வீரக்கடகறி முன்புதன்
பந்தி யிவுளி வைத்த
வீரற்கு வென்றிக் கருப்புவில்
வீரனை வெற்றி கொண்ட
சூரற் கெனதுள்ள நன்றுசெய்
தாயின்று தொண்டுபட்டே 45

(இ-ள்) சேரமான் பெருமாள் நாயனாரும் திருநாவலூரின் கண் அவதரித்த நம்பியாரூரருக்கு; சிவபெருமான் கொடுத்தருளிய வீரமிக்க யானையின் முன்பு; தன் பந்தியிலுள்ள குதிரையைச் செலுத்திய வீரரும் ஆகிய; வெற்றியுள்ள கருப்பு வில்லேந்திய காமனைச் சயங்கொண்ட சூரருக்கு இன்று பழ அடிமையாய்; என் மனமே நீ நன்கு செய்தாய் (எ-று) ஏ-அசை.

### கணநாதநாயனார்

தெண்டரை யாக்கி யவரவர்க்
கேற்ற தொழில்கள் செய்வித்
தண்டர்தங் கோணக் கணத்துக்கு
நாயகம் பெற்றவன் காண்
கொண்டல் கொண் டேறிய மின்னுக்குக்
கோல மடல் கடொறுங்
கண்டல்வெண் சோறளிக் குங்கடற்
காழிக் கணநாதனே 46.

(இ-ள்) தன்னிடத்து வந்த அடியார்களைத் திருத்தொண்டுக்குரியராகச் செய்து; அவர்களுக் கேற்ற பணிகளைச் செய்வித்து; தேவர்க்கதிபராகிய சிவபிரானது சிறந்தசிவகணங்கட்கு நாயகராம் முதன்மை பெற்றவர் யாரெனில்; மேகங்களைத் தனக்கிடமாகக் கொண்டு வளர்கின்ற மின்னலாகிய புதல்விக்கு; அழகிய பூவிதழ் தோறும் தாழைகள் வெள்ளிய சோற்றைக் கொடுக்கும் கடற்கரையை யுடையசீகாழியில் அவதரித்த கணநாத நாயனார். (எ-று) ஏ-அசை.

அவரவரக்குரிய பணிகளவான; திருவிளக்கு, திருமாலை, திருநந்தனம் சமைத்தல் முதலியன.

### கூற்றுவ நாயனார்

நாதன் திருவடி யேமுடி
யாகக் கவித்து நல்ல
போதங் கருத்திற் பொறித்தமை
யாலது கைகொடுப்ப
வோதந் தழுவிய ஞாலமெல்லா
மொரு கோலின் வைத்தான்
கோதை நெடுவேற் களப்பாள
ரூகிய கூற்றுவனே. 47

(இ-ள்) சிவபிரான் சூட்டிய திருவடியையே தமக்கு முடியாகச் சூட்டிக் கொண்டு; நல்ல சிவஞானத்தைத் தம் திருவுள்ளத்தில் நிலைபெறச் செய்தமையால்; அச் சிவஞானமே தமக்குத் துணையாக; கடல் சூழ்ந்த நிலவுலகம் முழுவதும்; ஒரு செங்கோலின் கீழ் அடங்கி நிற்கச் செய்தார் யாரெனில்; மாலையணிந்த நெடிய வேற்படையை யேந்திய களந்தைக் கோனாகிய கூற்றுவ நாயனார். (எ-று) ஏ-அசை.

### சுந்தரமூர்த்தி சுவாமிகள் துதி

கூற்றுக் கெவனோ புகதிரு
வாரூரன் பொன்முடிமே
லேற்றுத் தொடையலு மின்னடைக்
காயு மிடுதருமக்
கோற்றொத்து கூனனுங் கூன்போய்க்
குருடனுங் கண்பெற்றமை
சாற்றித் திரியும் பழமொழி
யாமித் தரணியிலே. (48)

(இ-ள்) இயமனுக்கு எம்மிடத்துச் சம்பந்தம் யாதிருக்கின்றது நீ சொல்; நம்பியாரூரர் திருமுடிமேல்; சூடுதற்குரிய மாலையும் இனிய முகவாசத்தையும் தினங் கொடுத்து வந்த; விளக்கமான கோலையூன்றிச் செல்லும் கூனனும் கூன் நீங்கி; அவ்வாறான குருடனும் கண்ணைப் பெற்றுக் கொண்டது; இந்நிலவுலகத்தில் யாவரும் எடுத்துச் சொல்லும் பழமொழியாக இருக்கும் அதனால். (எ-று) ஏ-அசை.

இவ்வாறான நம்பியாரூரரை வழிபடும் எமக்கும் கூற்றுக்கும் இறையில்லை என்பது கருத்து. பரவையார் திருமாளிகையில் நம்பியாரூரர்க்கு முன்னாளில் திருமாலையும் அடைக்காயும் கொடுத்து வந்த கூனனும் குருடனும் சிவபிரான் தூது சென்று பரவையார் பிணக்குத் தீர்த்த நாளில் நம்பியாரூரர் திருவருளால் அவ்விருவருங் கூனும் குருடும் நீங்கி உய்ந்தனர் என்பது சரிதம்.

(தொடரும்)

உ

# பிறவாமை வேண்டும்

புலவர் த. கோடப்பிள்ளை, பி.ஏ.,

## காட்சி 3

இடம் : தனதத்தன் இல்லம்.

காலம் : காலை

உறுப்பினர் : பொன்னம்பலம், தனதத்தன், சிவகாமி, நிதிபதி, சிவப்பழம், நந்தி முதலாகப் பலர்.

நிகழ்ச்சி : பரமதத்தன்-புனிதவதி திருமணம்

காட்சி தொடங்கும்போது மணமக்கள் மணவறையில் அமர்ந்திருக்கிறார்கள். மங்கலஇசை முழங்குகிறது. புரோகிதர் மணச்சடங்கியற்ற, பரமதத்தன் புனிதவதிக்குத் திருப்பூட்டுகிறான். எல்லாரும் மங்கல அரிசியைத் தூவி வாழ்த்துகிறார்கள்.

பொன்ன : (மணமக்கள் வணங்க அவர் நெற்றியில் திருநீறு இட்டு) நீடுழி வாழுங்கள். பெரியோர் உள்ளம்போல் வாழுங்கள். கைலயங்கிரி வாழும் சிவபெருமானும் உமாதேவியும் போல் வாழுங்கள். அவர்தம் அருள் உங்களுக்குக் கிட்டுவதாக.

தனதத்தன் : (விருந்தினரை வரவேற்று) வாங்க, வாங்க, சந்தனம் எடுத்துக் கொள்ளுங்க.

சிவ : பூசிக்கொள்ளுங்க. சந்தனப் பொட்டு இட்டுக் கொள்ளுங்க.

தனதத்தன் : எல்லாரும் இருந்து சாப்பிட்டுப் போகணும். நந்தி! சிவப்பழம்!

சிவ : நந்தி : ஐயா,

தனதத்தன் : விருந்து வைக்கிறதைப் போய்ப் பாருங்க. எல்லாரையும் நல்லாக் கவனித்து உணபிக்கணும்!

சிவ : அப்படியே செய்து விடுறேங்க.

நந்தி : வாருங்கள்...எல்லாரும் எழுந்திருங்கள்.

தனதத்தன் : வாங்க சம்பந்தி!...அழைத்தீர்களா?

நிதிபதி : ஆமாம், நாம் கொஞ்சம் நேரம் அப்படி இருந்து பேசுவோமே...

தனத : சரிங்க...(மனைவியைப் பார்த்து) மணமக்களை உள்ளே அழைத்துப் போய் பால் பழம் கொடுக்க ஏற்பாடு செய்!

சிவகாமி : சரிங்க (அழைத்துப் போகிறாள்).

நிதிபதி : சம்பந்தி! முன்னயே நான் சொன்னபடி நம் பிள்ளைகளை அழைத்துச் சென்று சில நாள் எம் இல்லத்தில் வைத்திருந்து மகிழ்வாக அனுப்பி வைக்கிறோம்.

தனத : உங்கள் விருப்பம் போல் செய்யுங்கள். ஆனால் நான் அப்போதே சொன்னேனே அதைப்போல—அதாவது, உங்கள் பையன் எங்கள் வீட்டு மாப்பிள்ளை.

நிதி : ஆமாம்...

தனத : அவன் எங்கள் வீட்டு மாப்பிள்ளையாக இருப்பதோடே எங்கள் வீட்டுப் பிள்ளை யாகவே இருக்கட்டும் என்கிறேன். இதோ பாருங்கள் எங்களுக்கோ ஒரே பெண்; ஒரு கண். இப்போது இரண்டு பேரும் இரண்டு கண்கள். எங்களுக் கிருக்கின்ற செல்வமெல்லாவற்றையும் பார்த்துக் கொள்வதற்கும் மாப்பிள்ளை இருந்தால்தான் நல்லது.

நிதி : அது சரிங்க சம்பந்தி! நம்மிடம் எவ்வளவு செல்வம் இருந்தாலும் நமது வழக்கப் படி பையனும் தானே பொருள் ஈட்டிக் குடும்பம் நடத்தணும்; அறஞ்செய்யணும் இல்லையா?

தன : ஆமாம், ஆமாம் அதற்காக...நான் நினைக்கிறேன், கொஞ்சம் முதல் போட்டு இந்தக் காரைக்காலிலேயே ஒரு துணிக்கடை வைத்துக் கொடுக்கலாம் என்று அவர்களுக்காக அருகிலேயே ஒரு மாளிகையையும் கட்டிக் கொடுத்து விடுகிறேன். எல்லா வசதியும் செய்து கொள்ளலாம். நீங்கள் என்ன சொல்கிறீங்க ?

நிதி : நான் என்ன சொல்லப் போகிறேன் சம்பந்தி. உங்கள் விருப்பம் போலவே செய்யுங்கள். நம் பிள்ளைகள் நலமாக இருக்கணும்; அதுதானே நம் விருப்பம்.

தன : ஆமாங்க சீக்கிரமாக மாளிகை கட்டி இல்லறத்தில் ஈடுபடுத்திக் கடையையும் வைத்துக் கொடுத்து விடுவோம். கடைக்குப் பழக்கப் பட்டவர்களில் ஒருவனாக, சிவப்பழத்தையே அமர்த்தி விடுகிறேன்.

நிதி : மிகவும் நல்லது.

## காட்சி. 4

இடம் : தெரு
காலம் : காலைப்போது
உறுப்பினர் : நந்தி, சிவப்பழம்

நந்தி : நமப்பார்வதி பதயே!...என்ன ஒருவரும் சொல்லலே .. ஓகோ...இங்கே யாரும் இல்லையா? நான் மட்டும்தான் இருக்குறேனா? நமப்பார்வதி பதயே...அரகர மகாதேவா !...சம்போ மகாதேவா...இன்னிக்குத் தில்லைப்பதியில் திருநடம் புரியும் திருக்கூத்தனின் திருப்பிரசாதம் கொண்டு வந்திருக்கிறேன். யாரும் வரலியே. நான்தான் முன்னாடியே வந்துட்டேனா? சரி, இன்னமேதான் எல்லாரும் வருவாங்க. அதோ வருகிறாங்க...வாங்க...வாங்க...பிடியுங்க... திருநீறு...பூசிக் கொள்ளுங்கள். தில்லை நடராசனாரின் திருப்பிரசாதம் யார்க்கும் கிடைக்காத பிரசாதம். பூசிக்கொள்ளுங்கள். சிவஞானப் பேரருள் சித்தியாகும் அஞ்ஞானம் அகலும், மெய்ஞ்ஞானம் கிட்டும். தலையிலே போட்டுக் கொள்ளுங்கள். நாக்கிலே இட்டுக் கொள்ளுங்கள். அரகரா மகாதேவா என்பார்க்கு ஆபத்து ஒருநாளும் இல்லை அன்பர்களே ! நண்பர்களே அடியாரைப் பேணுங்கள். சிவனடியார்களை வணங்குங்கள்; போற்றுங்கள். அள்ளித்தாருங்கள். காசு பணம் கொட்டிக் கொடுங்கள். (சிலர் காசு கொடுங்கள். (சிலர் காசு கொடுக்க வாங்கி எக்கில் செருகிக் கொள்கிறான்)...உம்... இன்னும் கொடுங்கள். சிவபெருமான் பேரருள் சித்திக்கும்....உம் பூசுங்கள் திருநீறு...உங்கள் வீட்டில் உள்ளார்க்கும் கொண்டு போய்க் கொடுங்கள், போய் வாருங்கள். (சிவப்பழம் வருதல்...அவனுக்கும் திருநீறு கொடுத்து) பூசிக்கொள்...தில்லைப்பிரானின் அல்லல்போக்கும் அருமருந்து. பூசிக்கொள். பூசிக்கொள்...(சிவப்பழத்தைப் பார்த்துக் கூச்சமுற்று)...ஆ...நீயா அண்ணே ! சரி பூசிக்கொள் திருநீறு !

சிவப்பழம் : என்ன நந்தி !

நந்தி : (சமாளித்து) இது...தில்லை இருக்கே தில்லை ! எம்பெருமான் என்றும் பொற்பொதுவில் திருநடம் புரிகிறாரே அங்கேயிருந்து வந்த திருநீற்றுப் பிரசாதம்... (மற்றவரைப் பார்த்து) சரி...நீங்களெல்லாம் ஏன் நிற்கிறீர்கள்? பிரசாதம் வாங்கியாச்சுல்ல? போங்க. (போகிறார்கள்).

சிவ : நந்தி ! நந்தி !

நந்தி : என்ன அண்ணே சிவப்பழம்? நீயும் கொஞ்சம் காசு கொடு. பிரசாதம் கொடுத்ததற்கு !

சிவ : (அதட்டலாக) நந்தி ! என்ன இது ? இந்த மாதிரி ஊரை ஏமாற்றிப் பிழைக்காதே என்று சொல்லியிருக்கிறேனா இல்லையா? சாம்பலை எடுத்துக் கொண்டு திருநீற்றுப் பிரசாதம் என்று கொடுக்காதே, கொடுக்காதே என்று சொன்னேனா? அதுதான் போகிறது ..சிவபெருமான் சிவத்தலங்களிலிருந்து வந்தது என்று வேறு பொய் சொல்லி விற்கிறே. விற்றுக் காசு சம்பாதிக்கிறே. சே...சே... நீ சைவ சமயத்திற்கு அப்பாற்பட்டவன். இறைவன் பெயரைச் சொல்லி மக்களை ஏமாற்றும் எத்தன்? இப்படிப் பட்டவனோடு நான் தொடர்பு கொண்டதே தப்பு- ...சீ...இனி என்னோடு பேசாதே. என் முகத்தைக்கூட பார்க்காதே.

நந்தி : (வருந்தி) அண்ணே! நான் தப்பு செய்துட்டேன். அண்ணே தப்பு செய்திட்டேன். பொறுத்துக்கொள் அண்ணே! நான் என்னதான் செய்றது? அண்ணே! நான் உன்னையே உண்மை நண்பரா கொண்டிருக்கிறேன். நீ விட்டிடாதே அண்ணே!

சிவ : அப்படியானால் நீ முதலிலே இந்த ஏமாற்று வித்தையை விடு.

நந்தி : சரி அண்ணே! இன்றையிலிருந்தே-இப்போதிருந்தே-விட்டிடுறேன்.

சிவ : சரி.

நந்தி : அண்ணே! இப்போ எங்கே போய்க்கிட்டிருக்கீங்க?

சிவ : கடைக்குத்தான். முதலாளி பரமதத்தன் வருவதற்குள் நான் போய்க் கடை திறக்க வேண்டும்.

நந்தி : ஆமாம், ஆமாம்...சரி வாருங்கள். நானும் கடைத் தெருப்பக்கம் வரவேண்டும். அதோ...சிவப்பழம்! அவரே வந்து கொண்டிருக்கிறார்.

சிவ : பார்த்தாயா நந்தி, உன்னோடு பேசிக் கொண்டிருந்து விட்டேன். அவரும் வந்து விட்டார்.

பரம : சிவ சிவ, யார்?...நந்தியா, என்னப்ப நலமா?

நந்தி : நலந்தானுங்க!

பரம : நன்று...சிவப்பழம்...கடைக்குப் போவோம்?

சிவ : போவோங்க.

பரம : வாருங்கள்.

## காட்சி 5

இடம் : பரமதத்தன் துணிக்கடை

உறுப்பினர் : பரமதத்தன், சிவப்பழம், துணி வாங்க வந்த நண்பர் இருவர்.

பரம : இந்தா சிவப்பழம்! இந்தத் துணியை மடக்கிவை. ஏன் அந்தப் புடவை கீழே கிடக்கிறது? எல்லாவற்றையும் எடுத்து அடுக்கிவை. துணிக்கடை என்றால் வருவோரைக் கவர்தல் வேண்டும். (நண்பர் வருவதைப் பார்த்து) வாங்க, வாங்க!

நண்பர் : வருகிறோங்க.

பரம : என்ன பல நாளா இந்தப் பக்கமா வரவில்லையே...

நண்பர் : ஆமாங்க. வேலை மிகுதி. ஒழியலே. வரமுடியலே. என்ன வாணிகம் எல்லாம் எப்படி யிருக்கிறது?

பரம : முதலிலே உட்காருங்க. வாணிகம் வாணிகம்தான் போங்க. முன்னேபோல அவ்வளவா நடக்கிறதில்லை. எல்லாம், உங்களைப் போல ஆளுங்க வாடிக்கை அதிகமாக இருந்தால்தானே நடக்கும். சரி, ஊரிலே எல்லாரும் நலமா இருக்கிறார்களா? மழை மாரியெல்லாம் உண்டா? வயல் வெள்ளாமை எப்படி இருக்கிறது.

நண்பர் 2 : எல்லாம் சுமார்தானுங்க. பருவத்திலே மழை சரியாப் பெய்யலே. அதனாலே விளைச்சல் இப்படியும் அப்படியும்தானுங்க. என்னமோ 'அவன்' அருளாலே வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

பரம : ஆமாம் ஆமாம். சிவனருள் சித்திக்கவில்லையானால் நாமெல்லாம் எப்படி வாழப் போகிறோம்? நம்முடைய முயற்சியோடு இறையருளும் கூடிவிட்டால் இம்மியும் குறைவில்லை. இதோ பாருங்கள். நெய்வோரெல்லோரும் நெய்து நெய்து துணிகளைக் கொண்டு வந்து அடுக்கி வைத்திட்டுப் போகிறார்கள். வாணிகம் ஆனால்தானே அவர்களுக்குக் கூலியைக் கொடுக்கலாம். என்னமோ கடவுளின் கருணை நமக்குச் சித்திக்கக் காலதாமதம் ஆகிறது.

(தொடரும்)

# பெரியபுராணப் பெண்மணிகள்

(சி. மீனும்பாள், நன்னிலம்)

பெண்கள் நாட்டின் கண்கள் என்பர். ஒரு நாட்டின் நாகரிகத்தை அளவிட வேண்டுமென்றால் அங்குள்ள பெண்களின் வாழ்க்கை நிலையைக் கொண்டே தெரிந்து கொள்ளலாம் என்று அறிஞர்கள் கூறியிருக்கின்றனர். பெண்களிடையே காணும் பண்பாடே நாட்டின் நாகரிகத்தைப் பிரதிபலிக்கும் கண்ணாடி. பெண்ணின் பெருமைக்குப் பெயர் பெற்றது நம்முடைய இந்திய நாடு சிறப்பாக நம் தமிழகம் மிகப் பழங்காலந் தொட்டே பெண்களுக்கு உயர்ந்த நிலையை வழங்கியிருக்கிறது. ஒக்கூர் மாசாத்தியார், குறமகள் இள எயினி, காக்கை பாடினியார் நச்செள்ளையார், ஔவையார் போன்ற நல்லிசைப் புலமை மெல்லியலார் பலரை சங்க இலங்கியங்களில் காண்கிறோம். ஔவையார் போன்றோர் அமைச்சராக அறிவுரை கூறியும், சமாதான தூதுவராகவும் விளங்கியதை நாம் எல்லோரும் அறிவோம். பிற்காலத்தில் திருமுறையாசிரியர்கள் பெண்களுக்கு ஏற்றம் கொடுத்த பெருமைக்குச் சான்றுகள் நிறையவுள்ளன. இங்கு நான் எடுத்துக் கூற விரும்புவது பெரிய புராணத்தில் காணப் பெறும் பெண் மணிகளைப் பற்றியதே.

திருத்தொண்டர் புராணத்தில் முப்பத்து நான்கு பெண்களைப் பற்றிப் பேசப் பெற்றிருக்கிறது. அவர்களில் காரைக்காலம்மையார், மங்கையர்க்கரசியார், இசை ஞானியார் மூவரும் தனித்தனியே புராணம் பெற்றவர்கள். அம்மூவரிலும் காரைக்காலம்மையாரே பாடல்கள் இயற்றிப் புகழடைந்தவர்கள். முப்பத்து நாலு பெண்களில் தாய்மார்கள் அறுவர், சகோதரியாக ஒருவர், மனைவியராக இருபதின்மர், புதல்வியராக அறுவர், பணிப் பெண்ணாக ஒருவர் ஆகத் திகழ்ந்தனர்.

தாய்மார் அறுவர்: பகவதியார் சிவபாத இருதயரின் மனைவியார்; சம்பந்தரைப் பெற்றெடுத்தவர் மாதினியார். புகழனாரின் துணைவியார்; திருநாவுக்கரசின் தாயார். இசை ஞானியார் சடையனாரின் வாழ்க்கைத் துணைவியார்; சுந்தரரை ஈன்றெடுத்தவர். கமலவதியார் சோழ மன்னன் சயதேவனின் அரசியார்; கோச் செங்கட்சோழரின் அன்னையார். தத்தையார் வேடர் குலத்தலைவன் நாகனின் தேவியார். கண்ணப்பரை மகவாய்த் தந்த பெண்மணியார். பவித்திரையார் எச்ச தத்தன் என்பாரின் இல்லக் கிழத்தியார்; சண்டேசுவரைப் பெற்றெடுத்த பெருமை படைத்தவர்.

சகோதரியார் ஒருவர்: திலகவதியார் மங்கையர்க்குத் திலகமாக இலங்கிய நலமிக்கார். புகழனார் மாதினியார் ஈன்றெடுத்த மாது சிரோமணி. அப்பர் பெருமானின் தமக்கையார்.

மனைவியர் இருபதின்மர்: காரைக்காலம்மையார், மங்கையர்க்கரசியார், திருமருகல் வணிகப் பெண், மதங்கசூளாமணியார், பரவையார், சங்கிலியார், ஆகியோரும் இயற்பகையார், இளையான்குடி மாறர், அரிவாட்டாயர், நமிநந்தியடிகள், அப்பூதியடிகள், சிறுத்தொண்டர், திருநீலகண்டர், குங்கிலியக் கலயர். ஏயர்கோன் கலிக்காமர், திருநீலநக்கர், மெய்ப் பொருளார், கலியர், கலிக்கம்பர், கழற்சிங்கர், இவர்களின் மனைவியரும் ஆக இருபது பேர்கள்.

புதல்வியர் அறுவர்: சடங்கவியார் மகள், வனப்பகையார், சிங்கடியார், நம்பாண்டர் மகளார், பூம்பாவையார், மானக்கஞ்சாறர் மகளார் ஆகியோர்.

பணிப்பெண் ஒருவர்: சந்தன நங்கையார்; சிறுத்தொண்டர் இல்லத்துப் பணிப் பெண்.

மேற் சொன்ன பெண்மணிகள் பற்றித் தனித்தனியே அருளோசை யிதழின் மகளிர் பகுதியில் தொடர்ந்து எழுத முயல்வேன்.




அவர்கள் எழுதும்




என்னும் தொடர் கட்டுரை




# அடுத்த இதழில்
# தொடங்குகிறது